# ஸ்ரீ சிவஞானபாலய தேசிகர்
## தாலாட்டு





மயிலம் - பொம்மபுர ஆதீனம்.

உ

திருமயிலம் முருகன் துணை

ஸ்ரீ பாலசித்த குருவே நம:

## திருக்கயிலாய பரம்பரை

## மயிலம்-பொம்மபுர ஆதீனம்

## முதற் குரவர்

## ஸ்ரீ பால சித்தர்

# குரு பூசை மலர்



ஆங்கீரச ஆண்டு — ஆனித்திங்கள்

ஜூன்-1992




மயிலம்-பொம்மபுர ஆதீன வெளியீ

உ
சிவமயம்

ஸ்ரீ பால சித்த குருவே நம;
ஸ்ரீமத் சிவஞான பாலய தேசிகன் திருவடி வாழ்க,
நல்லாற்றூர் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய

# ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டு

## மூலமும் - உரையும்

பத்தொன்பதாம் பட்டம்
**ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்**
அருளாணையின் வண்ணம் வெளி வருகிறது.

உரையாசிரியர் ;
**வித்துவான். வீ. குமாரசாமி ஐயர்,**
முன்னாள் முதல்வர்,
ஸ்ரீ. சி. பா, சு. தமிழ்க் கல்லூரி, மயிலம்.

பதிப்பாசிரியர் .
கு. சி. இராஜேந்திரன், பி.காம்., பி.எல்.,
திருமடம், மயிலம்,

உ

பால சித்த குருவே நம :

சிவஞான பாலய தேசிகன் திருவடி வாழ்க.

# குருமரபு வாழ்த்து

பரசிவமார் திருக்கயிலைப் பரம்பரையின் வீரசைவ
பரமே காட்டப்

பரனருளால் பொம்மபுரக் கடலுதித்த சங்குகன்னப்
பால சித்தர்

வரமயிலார் முருகனுப தேசமுடன் வந்துகுரு
வாகி யாண்ட

திறமிகுபேர் சிவஞான பாலயநற் குருமரபு
சிறந்து வாழி.

11-5

உ

சிவமயம்

ஸ்ரீ பால சித்த குருவே நம :

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க !

## திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்
## பத்தொன்பதாம் பட்டம்
## அருண்மிகு குருமகா சந்நிதானம்
# ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

## அருளிய ஆசியுரை

ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தம் ஞானாசிரியராகிய பொம்மபுரம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் பால் உபதேச முறையில் அறிந்த சடுஸ்தல சித்தாந்த தத்துவ நுண் பொருள்களையும், சுவாமிகளின் பெருமைகளையும் 'ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டு' என்ற நூலில் கூறியுள்ளார்கள். அதன் பொருள் எளிதில் யாவரும் அறிய இயலாதவாறு உள்ளது. இந்நூல் வீரசைவ சித்தாந்த நூலாகும். இந்நூலிற்கு விளக்கவுரை ஒன்று வேண்டுமென பல்கால் எண்ணியதுண்டு. அதனை எங்கள் ஆதீனப் புலவராகிய திரு. வீ. குமாரசாமி ஐயர் நிறைவேற்றியுள்ளார்கள். அவர்களது உரையுடன் இந்நூல் ஸ்ரீ பால சித்தர் குருபூசை மலராக வெளி வருகிறது. தமிழக மக்கள் குறிப்பாக வீரசைவப் பெரு மக்கள் சமய உண்மைகளை அறிந்து திருவருளையும் குருவருளையும் பெற்றுய்வார்களாக.

# பொருளடக்கம்

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க.

# பதிப்புரை

திருக்கயிலாயத்தில் சிவபெருமானிடம் அணுக்கத் தொண்டராக சங்குகன்னர் இருந்தார். இவர் சிவபெருமானுடைய ஆணையால் உலகில் சைவ ஆகமத்தை விளக்கும் பொருட்டு கீழ்க்கடலில் பாலவடிவத்தில் இலிங்க தாரணம், விபூதி, உருத்திராக்கம், கல்லாடையுடன் **பாலசித்தர்** என்ற திருப் பெயருடன் தோன்றினார்கள். இவர்கள் பொம்மபுரத்திலும் பிற இடங்களிலும் உள்ள முனிவர், சித்தர் முதியோர்க்கு சைவம், வீர சைவம் இவற்றின் நெறிகளைத் திருமடம் அமைத்துக்கொண்டு விளக்கி அருளினார்கள். இவர்கள் பொம்மபுரம் திருமடத்தின் முதல் குருமூர்த்தியாய்த் திகழ்ந்தவர்கள். இவர்களது அருள்வழி வந்த, ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளைத் தம் ஞானாசிரியராகக் கொண்ட ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தம் ஞானாசிரியர் மூலம் சிவாநுபவத்தை நன்குணர்ந்தவர்கள் ஆதலின் சுவாமிகள் மீது ஐந்து சிறந்த நூல்களை இயற்றியருளினார்கள். அவற்றுள் ஒன்று 'ஸ்ரீசிவஞான பாலய தேசிகர் தாலாட்டு' இந்நூலிற்கு சிறந்த உரை ஒன்று வெளியிட வேண்டுமென்றும் தமிழக மக்கள் குறிப்பாக வீர சைவப் பெருமக்கள் பின்பற்றத்தக்க சமுதாய, சமய தத்துவக் கொள்கைகளைப் பின்பற்றி ஒழுகி உயர்வடைய வேண்டும் என்றும் பேரருள் நோக்கில் திருவுளங் கொண்ட மயிலம் பொம்மபுர ஆதீனம் 19-ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் பெருங்கருணையால் இந்நூல் வெளி வருகிறது.

எங்கள் ஆதீனப் புலவர் திரு. வித்துவான். வீ. குமாராசாமி அய்யர் அவர்கள் ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டிற்கு சிறந்த உரை எழுதியுள்ளார்கள். இவ்வறிஞருக்கு என் அகங் கனிந்த நன்றி என்றும் உரியது.

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க.

# பதிப்புரை

திருக்கயிலாயத்தில் சிவபெருமானிடம் அணுக்கத் தொண்டராக சங்குகன்னர் இருந்தார். இவர் சிவபெருமானுடைய ஆணையால் உலகில் சைவ ஆகமத்தை விளக்கும் பொருட்டு கீழ்க்கடலில் பாலவடிவத்தில் இலிங்க தாரணம், விபூதி, உருத்திராக்கம், கல்லாடையுடன் **பால சித்தர்** என்ற திருப் பெயருடன் தோன்றினார்கள். இவர்கள் பொம்மபுரத்திலும் பிற இடங்களிலும் உள்ள முனிவர், சித்தர் முதியோர்க்கு சைவம், வீர சைவம் இவற்றின் நெறிகளைத் திருமடம் அமைத்துக்கொண்டு விளக்கி அருளினார்கள். இவர்கள் பொம்மபுரம் திருமடத்தின் முதல் குருமூர்த்தியாய்த் திகழ்ந்தவர்கள். இவர்களது அருள்வழி வந்த, ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளைத் தம் ஞானாசிரியராகக் கொண்ட ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தம் ஞானாசிரியர் மூலம் சிவானுபவத்தை நன்குணர்ந்தவர்கள் ஆதலின் சுவாமிகள் மீது ஐந்து சிறந்த நூல்களை இயற்றியருளினார்கள். அவற்றுள் ஒன்று 'ஸ்ரீசிவஞான பாலய தேசிகர் தாலாட்டு' இந்நூலிற்கு சிறந்த உரை ஒன்று வெளியிட வேண்டுமென்றும் தமிழக மக்கள் குறிப்பாக வீர சைவப் பெருமக்கள் பின்பற்றத்தக்க சமுதாய, சமய தத்துவக் கொள்கைகளைப் பின்பற்றி ஒழுகி உயர்வடைய வேண்டும் என்றும் பேரருள் நோக்கில் திருவுளங் கொண்ட மயிலம் பொம்மபுர ஆதீனம் 19-ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் பெருங்கருணையால் இந்நூல் வெளி வருகிறது.

எங்கள் ஆதீனப் புலவர் திரு. வித்துவான். வீ. குமாரசாமி அய்யர் அவர்கள் ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டிற்கு சிறந்த உரை எழுதியுள்ளார்கள். இவ்வறிஞருக்கு என் அகங் கனிந்த நன்றி என்றும் உரியது.

ஆதீனத்தின் அருட் பணிகளுக்கு என்னை ஆட்கொண் டருளும் அருண்மிகு குருமகா சந்நிதானங்களின் திருவடித் தாமரை மலர்களுக்கு என் வணக்கங்கள் என்றும் உரியன.

தமிழக அறிஞர்களும் சான்றோர்களும் இத்தகைய அருட் பணிகளில் மேலும் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் தருவதுடன் தங்களின் கருத்துரைகளைத் தெரிவிப்பார்களாயின் அடுத்த பதிப்பு மேலும் சிறப்பாக அமைய ஏதுவாக இருக்கும்.

ஆதீனத்தின் சார்பில் நடைபெற்று வருகின்ற ஸ்ரீசிவப்பிரகாச சுவாமிகள் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் திரு. கு. இலிங்கராசு எம். ஏ., பி.எட்., அவர்களும் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி உதவியாளர் திரு. அ. கிருபானந்தம் எம்.ஏ.,எம்.பில்., அவர்களும் அச்சுப்படிகளை ஒப்பு நோக்கிச் செப்பம் செய்தனர், இவர்கட்குத் திருவருளும் குருவருளும் நிறைவதாகுக.

உரிய காலத்தில் அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ வீர ஹனு மான் அச்சகத்தார் பாராட்டிற்குரியவர்கள்.

தமிழுலகமும் சமய உலகமும் அருண்மிகு குருமாக சந் நிதானங்களுக்கு நன்றி செலுத்தும் கடப்பாட்டுடன் நூலினைப் பெற்றுப் பெரும் பயனடைவார்களாகுக.

அருண்மிகு குருமகா சந்நிதானங்களின்
திருவுளப்பாங்கின் வண்ணம்,
கு. சி. இராஜேந்திரன், பி.காம்., பி.எல்.,
திருமடம், மயிலம்.

ஓம்

# முன்னுரை

சிவாநுபூதிச் செல்வராகிய ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளால் ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டு எனப் பெயரிய இந்நூல் இயற்றப்பெற்றது. ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் மயிலம்-பொம்மபுர ஆதீனத்தின் இரண்டாம் குருமகா சந்நிதானமாக விளங்கியவர். இச்சுவாமிகளுக்குச் 'சிவஞானி' 'சிவஞானதேவன்' என்ற திருப்பெயர்கள் நூல்வழக்கில் ஆட்சி பெற்றுள்ளன. ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் சிவஞானிபால் ஞானோபதேசம் பெற்று அப்பெருமானுக்கு முதற் சீடரானார். தம் ஞானாசிரியர்பால் அறிந்த தத்துவ நுண்பொருள்களை அடக்கித் 'தாலாட்டு' என்னும் நூலாகப் பாடியுள்ளார். இந்நூல் குறள் வெண்செந்துறையாப்பாலாகிய நூறு கண்ணிகளைக் கொண்டது.

தாய்மார்கள் தாலாட்டுப் பாடல்களைப் பாடுவர். அப்பாடல்களில் மகவின் பெருமை சொல்லப்படும். இனிய ஓசை அமைந்திருக்கும் பாடலின் ஈறு ஓகாரத்தில் முடிவு பெறும். அவ்வாறே இத்தாலாட்டு நூலில் சிவஞானியின் தெய்வீகப் பெருமை சொல்லப்படுகிறது. ஒவ்வொரு கண்ணியும் இன்னோசை தழுவியது ஓகார முடிவு பெறுகிறது

இந்நூலாசிரியராகிய சுவாமிகள் 1 - 59, 68, 72 - 80 கண்ணிகளில் சிவயோகிகளின் அநுபவமாகிய ஷட்ஸ்தல சித்தாந்தத்தைச் சுருக்கமாக கூறியுள்ளார். ஏனைய கண்ணிகளில் சிவஞானியின் அளவில் தவப்பெருமை - வள்ளன்மை - இடப்பெருமை முதலியவற்றை விளக்கமாகக் கூறியுள்ளார். 91, 98, 100 கண்ணிகளில் தமக்கும் தம் ஞானாசிரியருக்குமுள்ள இணையற்ற தொடர்பினை மனமுருகி வெளிப்படுத்தியுள்ளார். காப்புச் செய்யுளில் " சிவஞான தேவன் - திருமுன் " என்று கூறியிருப்பதால் சிவஞான பாலய தேசிகர் திருமுன்னிலையில் பாடப் பெற்ற நூல் இஃதென்பது தெரியவரும்,

தற்போது மயிலம் - பொம்மபுர ஆதீனம் குருமகாசந்நிதானமாக அருளாட்சி புரியும் (பத்தொன்பதாம் பட்டம்) சிவத்திரு-சிவஞான பாலய சுவாமிகள் தம் திருமுன்னிலையில் 1978-ஆம் ஆண்டில் நடைபெறச் செய்த சமயவகுப்பில் அடியேனை இந்நூலிற்குப் பொருள் உரைக்குமாறு கட்டளையிட்டார்கள். அப்பணியை நிறைவேற்றினேன். பின்னர் இந்நூலை உரையுடன் வெளியிடத் திருவுளங்கொண்டு அப்பணியை ஆற்றுமாறு பணித்தார்கள். அதனை மேற்கொண்டு இந்நூலிற்கு உரை எழுத முற்பட்டேன். நூல் சிறிய அளவிற்றாயினும் பொதிந்துள்ள பொருள் பெரிதாம். என் அறிவின் எல்லைக்கு அப்பாற்பட்டது. ஆயினும் திருவருள் துணைகொண்டு ஒருவாறு இந்நூலிற்கு உரையெழுதி யுள்ளேன். அச்சில் வராத வீரசைவ தந்துவப்பிரகாசம் - பரமரகசிய சடுத்தலம் - அல்லமாப் பிரபுதேவர் சடுத்தலம் - மிசிர சடுத்தலம் அக்கமாதேவி சிருட்டி ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள் வரைந்துள் ளேன், சமய கலைச் சொற்களுக்கு விளக்கம் தந்துள்ளேன். அட்டவணை யும் ஈற்றில் இணைத்துள்ளேன்.

என் உரையில் விடுபட்டனவோ, தவறுகளோ காணப்படின் அறிஞர்கள் அறிவிப்பார்களாயின் நன்றியுடன் திருத்தம் செய்து கொள்வேன்.

ஸ்ரீலஸ்ரீ பாலசித்தர் குருபூசை நினைவாக இந்நூலை என் உரையுடன் வெளியிடத் திருவுளங்கொண்ட சுவாமிகளின் பேரருளிற்கு என் நன்றியும், வணக்கமும் உரியன. எனது முதுமைப் பருவத்தில் இப்பணியை நிறைவேற்றுதற்குரிய அறிவாற்றலையளித்த இட்டலிங்கப் பெருமானை வழுத்துகின்றேன்.

மயிலம்
14—4—92

இங்ஙனம்
வீ. குமாரசாமி ஐயர்

சிவமயம்

ஸ்ரீமத் சிவஞான பாலய தேசிகன் சேவடி வாழ்க!

மயிலம் பொம்மபுரம்

# ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டு

## காப்பு

நேரிசை வெண்பா

அவஞானம் போக்கி அருள்ஞானம் ஆக்குஞ்
சிவஞான தேவன் திருமுன்—தவஞானத்
தாலாட்டு எனுந்தமிழைச் சாற்றுதற்கு நற்றுணையாம்
மாலாட்டு மாமுகத்தன் வந்து

பொருள் ;

மால் ஆட்டு மாமுகத்தன் — (வழிபடுவோரின்) அறிவு மயக்கத்தைப் போக்கும் யானை முகத்தையுடைய விநாயகக் கடவுள், அவஞானம் போக்கி—தம்மையடைந்தவரின் தாழ்வான அறிவைப் போக்கி, அருள் ஞானம் ஆக்கும்— தாம் அருளிச் செய்யும் உபதேசத்தால் சிவஞானம் பெறச் செய்யும், சிவஞான தேவன் திருமுன் – ஸ்ரீ சிவஞான பாலய தேசிகரது திருமுன்னிலையில், தவஞானத் தாலாட்டு எனும் தமிழைச் சாற்றுதற்கு— தவஞான நெறியை யுணர்த்தும் தாலாட்டு எனப் பெயரிய தமிழ் நூலை அடியேன் கூறுதற்கு, வந்து நற்றுணையாம்— எனது அன்பிற்குத் தோன்றி (நூல் இனிது நிறைவேற) நல்ல துணையாம்.

விளக்கம் : மாமுகத்தன், சாற்றுதற்கு, நற்றுணையாம் என்க,

சிவாநுபூதிச் செல்வராகிய ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தாம் இயற்றும் இந்நூல் இனிது நிறைவேறுமென்னும்

கருத்தினராயினும் ஆன்றோர் மரபு காத்தற் பொருட்டும், ஏனையோர் உணரும் பொருட்டும், முதற்கண் விநாயகர் காப்புக் கூறி நூலைத் தொடங்கியுள்ளார்.

அவஞானம் என்பதில் அவ என்பது கீழ் எனப் பொருள்படும் ஓர் இடைச் சொல். அவஞானமாவது 'நில்லாதவற்றை நிலையின என்றுணரும், புல்லறி வாண்மை கடை'' (குறள்-331.) என்றபடி உலகத்தில் தோன்றிய நிலையற்ற பொருள்களை அழியாத பொருள்கள் என்று கருதும் தாழ்வான அறிவும், ''பொருளல்லவற்றைப் பொருளென் றுணரு மருள்'' (குறள்-351) என்றபடி மெய்ப் பொருளல்லவற்றை மெய்ப் பொருளென்று உணரும் விபரீத உணர்வும் ஆம். "விபரீத உணர்வாவது மறுபிறப்பும் இருவினைப் பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மையவுஞ் சொல்லும் மயக்க நூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல்'' என்பர் பரிமேலழகர். ''திருமுன்'' என்றதால் இந்நூலாசிரியரால் தம் ஞானாசிரியராகிய ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் திருமுன்னிலையில் இந்நூல் கூறப்பெற்றதென்பது பெறப்படும். தம் ஞானாசிரியர் தம்மையனுகும், அன்பர்க்குப் பொருட் செல்வத்தையும் அருட் செல்வத்தையும் வழங்கி வரும் வள்ளன்மையைக் காட்சியிற் கண்டவராதலின் அவரது முன்னிலையைத் ''திரு'' என்னும் அடைபுணர்த்துத் ''திருமுன்'' என்றார். தவஞானம்- தவத்தால் உண்டாகும் ஞானம்; அதனால் வீடு அடைதலாகும் இங்குத் தவம் என்றது அங்கத் தலம் இலிங்கத் தலம் ஆகிய வற்றின் நெறியுணர்ந்து இலிங்காங்க சங்க சமரச நிலைபெறு இலிங்க நிட்டை கூடுதலாம். ஏனெனில், இந்நூலில் உணர்த்தப்பெறும் பொருள் அங்கலிங்க யோக தத்துவமாயிருத்தலின் என்க. வழிபட்டுத் தொடங்கும் அன்பர்களின் செயலை இடையூறின்றி நிறைவேற்றி வைக்கும் தெய்வ நாயகன் ஆதலின், ஆசிரியர் ''வந்து நற்றுணையாம்'' என்று தம் உள்ளத்திற் கொண்ட உறுதிப்பாட்டைப் புலப்படுத்தினார்.

தமிழ்-தமிழ் நூலைக் குறித்தது. தீயதைப் போக்கி நல்லதை ஆக்கி அளித்தலாகிய செயல் தோன்ற ''போக்கி'' என்றும் ''ஆக்கும் சிவஞான தேவன்'' என்றும் தம் ஞானாசிரியர்தம் அருட்டிறத்தைப் புலப்படுத்தினார்.

## நூல்

1. திருவருளால் என்னைத் தெரிவிக்க இங்குத்
திருவுருவாய் வந்த சிவஞான தேசிகனோ

பொருள் :

திருவருளால் - இறைவன் தன்து மேலான கருணையால், என்னைத் தெரிவிக்க-அடியேனது உண்மை நிலையையுணர்த்த இங்கு - இந்நிலவுலகில், திருவுருவாய் வந்த சிவஞான தேசிகனோ என் உளங்கவரும் திருமேனி கொண்டு எழுந்தருளிய சிவஞான பாலய தேசிகனே.

விளக்கம் :

திரு மங்கலச் சொல். இரு வினை வயப்பட்டு பிறப்பு இறப்புக்களால் அல்லலுறும் ஆன்மாக்களை உய்விக்க இறைவன் பேரருளான் ஞானாசிரியனாய் எழுந்தருள்வனாதலின் ''திரு அருளால்'' என்றும், ஆன்மா உணர்த்த உணருந் தன்மைத்தாதலின் ''என்னைத் தெரிவிக்க'' என்றுங் கூறினார். ''இங்கு'' என்ற அண்மையிடத்தைக் குறிக்குஞ் சொல்லாலும் ''வந்த'' என்ற எச்சச் சொல்லானும் சேய்மை யிடத்து (கயிலையில்) இருந்து இந்நிலவுலகிற்கு வந்தா னென்பது உணர்த்தப் பெற்றதாம். ஒரு நாமம் ஓருருவம் இல்லாத இறைவன் உருவும் பெயருங் கொண்டுற்றான் என்பதும், பக்குவமல்லாரும் காண்டல் நினைத்தல் மாத்திரையே பக்குவராய்ப் பயன்பெற நின்ற ஞானத் திருவுருவினர் என்பதும் தோன்ற ''திருவுருவாய் வந்த சிவஞான தேகிகனோ'' என்றார்.

சிவபெருமான் ஆன்மாக்களுக்கு மலத்தைப் போக்கிச் சிவாநந்தாநுபூதியைக் கொடுத்து இரட்சிக்க வேண்டுமென்னும் காருண்ணியத்தால் ஞான குருவாய்த் தோன்றி அருள்புரிவனென்பது சைவ சமய நூற்றுணிபு. இக் கருத்தைக் கீழ்வரும் பேரருளாளர் அருண் மொழிகள் உணர்த்தும்.

''மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணுமா போல்
துன்னிய ஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந் தொல்லுயிரை
மன்னும் அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்''
(சிவஞான சித்தியார்-சூ-ம் 8 செ.1)

(மன்னவன் குமாரனாவான் ஒருவன் பிள்ளைமைப் பருவத்து மடமையால் வேடருட்பட்டுப் பரதந்திரனாய்த் தன் சாதிக்குரிய பெருந்தகைமை யிழந்து இழிதொழில் பயிற்றி வளர்ந்து அவ்வரசனையும் தன்னையும் அறியாது மயக்கமுற்று நிற்க, பின்பு தந்தையாகிய அவ்வரசனும் நீ என் மகன் என்று அறிவுறுந்தி அவ்வேடரினின்றும் அவனைப் பிரிப்பித்துப் பெருந்தகைமையோடும் தானாம் வண்ணம் செய்து போற்றுமாறு போல் தன்னிலையிற் பிறழ்ந்து, நெருங்கிய ஐம்பொறி வேடர் சூழலிற்பட்டு அறிவிழந்து தன்னை அறியாமையே யன்றித் தலைவனையும் அறியாது நிலைபெற்றவுயிர் வருந்துமாற்றை இறப்பில் தவமுதிர்ச்சி நோக்கி நித்த முத்த சித்தெனப்படும் அவ் ஈசன் குருவடிவங் கொண்டு எழுந்தருளி வந்து உணர்த்தி அவ் ஐம்பொறியின் நின்று நீங்குமாறு மல வலியைக் கெடுத்து மீட்டுத் தொன்னிலையாய தன் வண்ண

மாக்கி அவ்வுயிரை மலர்போலுந் திருவடிக் கீழ் வைத்து வாழ்விப்பன். (ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் உரை.)

"எல்லா வுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலான்
சொல்லார்ந்த நற்குருச் சுத்த சிவமே"

(திருமந்திரம்-செ. 1576)

(இப்பால்-இவ்வுலகம். நல்லார்-சிவஞானிகள்)

"சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மை செய்து
அத்தனை நல்கருள் காணா அதிமூடர்
பொய்த்தகு கண்ணான் நமரென்பர், புண்ணியர்
அத்தன் இவனென்(று) அடிபணி வாரே."

(திருமந். செ. 1578)

(அத்தன்-சிவபெருமான். பொய்த்தகுகண்-ஊனக்கண்.)

திருமறைமா முனிவருக் கன்றால நீழல்
திருந்தஅறம் உரைத்தபெருந் தகைதான் இந்த
இருநிலமேல் அருளுருவாய் வந்து தோன்றி
இயைந்திடுநெல் தவிடுமுளை உமிபோல் ஏய்ந்த
திருமலவே ரினைநினைவால் உரையான் ஞானச்
செய்கையினால் அறுத்திருதாள் சென்னி சூட்டுங்
குருபரனை மருளுலக வாதை நீக்குங்
குணக்கடலை மனத்திலுற வணக்கஞ் செய்வாம்"

(சிவஞான தீபம். குருவணக்கம்)

மற்றும் இந் நூலில்,

'அருவாகி நின்ற சச்சிதானந்த ஈசன்
குருவாகித் தன்னைக் கொடுக்கும்எனச் சொன்னானோ.

(கண்ணி, 76)

என வருதலும் காண்க.

2. என்றுநித்த பூரணமாய் இன்பஅறிவு உண்மையாய்
நின்றபடி நிற்கு நிகழ்பிரமம் என்றானோ

பொருள் .

நிகழ் பிரமம்-விளங்கா நின்ற பிரமம், என்றும்-எக்காலத்தும், நித்தமாய் பூரணமாய் இன்பமாய் அறிவாய் உண்மையாய்-நித்தியமாயும் பூரணமாயும் இன்பமாயும் அறிவாயும் உண்மையாயும், நின்றபடி நிற்கும் என்றானோ-மாறுபாடின்றி ஒரே தன்மைத்தாய் இருக்குமென்று அருளியவனோ.

விளக்கம் ;

நிகழ் பிரமம், நின்றபடி நிற்கும், என்றானோ என்க. 'ஆய்' என்பதை நித்தம், இன்பம், அறிவு என்பவற்றோடுங் கூட்டுக. பிரமம் சத்து-சித்து-ஆனந்தம்-நித்தியம்-பரிபூரணம் என்ற ஐந்து இலக்கணங்களையுடையது.

1) எக்காலத்திலும் பிறப்பிறப்புக்களில்லாமலும் அழிவில்லாமலும் இருப்பதனால் **நித்தியம்** என்றும்,

2) ஆகாயம் போல வடிவங்கள் இல்லாமல் எவ்விடத்தும் நிறைந்திருப்பதனால் **பூரணம்** என்றும்,

3) துக்கம் சற்றுமில்லாமல் எக்காலத்தும் சுகமாயிருப்பதனால் **இன்ப**மாய் என்றும், (இன்பம்-ஆனந்தம்.)

4) தான் வேறியாதொன்றினாலும் அதாவது கண் முதலிய பொறிகளாலும் மன முதலிய அகக் கருவிகளாலும் அறியப் படாமல் எல்லாவற்றையும் அறிவதனால் **அறிவு**

(சித்து) என்றும்,

5) உலகத்தின் உற்பத்தி நாசங்களில் தான் சற்றேனும் சலனமடையாமல் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பதனால் **உண்மை (சத்து)** என்றும் கூறப் பெறும்.

முக்காலத்தும் உள்பொருளாதலின் வினைத்தொகையால் "நிகழ் பிரமம்" என்றார்.

*இதனால் பரசிவத்தலத்தின் இலக்கணம் கூறப் பெற்றது.*

## இலிங்கத்தலம் - அங்கத்தலம்

3. தன்சத்தி யாலாந் தலமங்க லிங்கமென
என்சத்தி பாதத்(து) எழுந்தருளிச் சொன்னானோ.

பொருள் :

என் சத்திபாதத்து-அடியேன்பால் அருட்சத்தி பதிந்த காலத்து, எழுந்தருளி-ஞானாசிரியனாய் எழுந்தருளி, தன் சக்தியால்-பரசிவத்துடன் விட்டு நீங்காமல் மலரும் மணமும் போலுள்ள சமவாய சிற்சத்தியின் லீலா விநோதத்தால், தலம் லிங்கம் அங்கம் ஆம் எனச் சொன்னானோ-அப்பரசிவத்தலம் ஒன்றே (உலக உற்பத்திக் காரணமாக) **இலிங்கத்தலம் அங்கத்தலம்** என இருவகைத்தாமென்று அருளியவனோ.

விளக்கம் ;

அங்க லிங்க மென்பது இலிங்க அங்கமென மாற்றியுரைக்கப்பட்டது. பின்வரும் பொருணோக்கத்தால்.

சத்தி பாதம் = சத்தி நிபாதம், சத்தி-அருட்சத்தி, நி-உபசர்க்கம். பாதம் = பதிதல். அருட் சக்தியின் பதிவு. இருவினையொப்பும் ஆணவ மலபரிபாகமும் உற்ற இடத்தே சத்தி நிபாதம் உண்டாகும். சத்தி நிபாதமாவது. ஆன்மாவினது ஞானத்தைத் தடுக்கும் ஆணவ மலசத்தி நழுவும் அவசரத்திலே முற்பிற்பாடறச் சிவத்தினது சிற்சத்தி பதிந்து அவ்வான்மாவினது நித்திய ஞானக்கிரியையை விளக்குவதாம். இருவினையொப்பாவது நல்வினை தீவினைகளில் விருப்பு வெறுப்பின்றிக் காண்டல். மலபரிபாகம்-மலசத்தி தேய்தல். சத்தி நிபாதம் உற்றவர்க்கு உபதேசித்தலே பயன் தருவதாம்.

சத்தி நிபாதம் நான்கு வகைப்படும். அவை ; **மந்தம் - மந்ததரம் - தீவிரம் - தீவிர தரம்**, மந்தம்-நமக்குப் பேறாயுள்ள ஒரு பதி யுண்டென்ற அறிவு உண்டாயிருத்தல், மந்த தரம்-அப்பதியை யடைவதற்கு வழியெப்படியென்று ஆராய்தல், தீவிரம்-அப்படி ஆராய்ந்தறிந்த பதியை அடைவதற்கு உலகை வெறுத்துப் புளியம் பழமும் அதன் ஓடும்போல நிற்றல். தீவிர தரம்-உலகை முற்றத் துறந்து ஞானாசிரியனே பொருளெனக் கண்டு வழிபடுதல்.

சத்தி நிபாதம் என்பதற்கு மாதச் சிவஞான சுவாமிகள் பாடியத்தில் பின்வரும் விளக்கம் கூறுவர்.

''சத்தி நிபாதம் என்னுஞ் சொல்லியல்பு சத்தியினது வீழ்ச்சி என்றவாறு. நி என்பது ஏற்றமாக என்னும் பொருள் குறித்து நின்ற தோரிடைச் சொல், ஓரவைக் களத்தின் நடுவே ஒரு கல் வந்து வீழ்ந்தால் அவ்வீழ்ச்சி அவைக் களத்துள்ளாரை ஆண்டு நின்றும் அகல் விக்கும். அதுபோலச் சத்தி நிபாதம் நிகழ்ந்த மாத்திரையே அஃது அவ்வான்மாவை மனைவி மக்கள் முதலிய

உலகத் துழனியின் அச்ச நிகழ்ந்து அவ்வுலக வாழ்க்கையினின்று வெரீஇப் போந்து உண்மைக் குரவனை நாடிச் செல்லுமாறு செய்வித்தலின், அவ்வொப்புமை தோன்றச் சத்தி நிகழ்ச்சி யென்னாது சத்திவிழ்ச்சி யென்றோதப் பட்டது. (துழனி-ஒலி)

அங்கம் என்பது ஈண்டு ஆன்மாவைக் குறிக்கும். இறைவன் தங்குதற்குரிய இடமாக (அங்கமாக) இருத்தலின், ஸ்தலம் = தலம். அவசரம், சமயம் எனினுமாம். ஒவ்வொரு இலிங்கத்துடன் ஒவ்வொரு அங்கம் ஐக்யப்படுதலே ஸ்தலம் (தலம்) ஆம். அங்கத்தலம் சீவத் தலமென்றும் இலிங்கத் தலம் சிவத்தலமென்றும் கூறப்பெறும்.

இதனால் பரசிவத்தலம் அங்கத்தலம் இலிங்கத்தல மென இரண்டாயினவாறு உணர்த்தப் பெற்றது.

## இலிங்கத் தலம்

## மூவகையான இலிங்கம். (திரிவித லிங்கம்)

4. நண்பாகும் இட்டலிங்க நன்றாம் பிராணலிங்கம்
ஒண்பாவ லிங்கமாம் ஓர்பொருளிங் கென்றானோ.

பொருள் ;

இங்கு-இலிங்கம் அங்கம் என இருவகைப்பட்ட இந்நிலையில், ஓர்பொருள்-ஒப்பற்ற பரசிவம், நண்பாகும் இட்டலிங்கம் நன்றாம் பிராணலிங்கம் ஒண்பாவ லிங்கம் ஆம் என்றானோ- (உயிர்க்குத் துணையாகும் இஷ்டலிங்கம் நன்மையுடையதாகும். பிராணலிங்கம் ஞானமயமான பாவலிங்கம் என (மூன்று) ஆகும் என்றருளியவனோ.)

விளக்கம் :

ஓர் பொருள், ஆம், என்றானோ என்க.

இதனால் பரசிவமாகிய ஒரு பொருள் இஷ்ட-பிராண-பாவ லிங்கங்களாயினவாறு உணர்த்தப் பெற்றது.

"இஷ்ட லிங்கம்-தோன்றும் உருவாய் இஷ்டத்தைக் கொடுத்து அநிட்டத்தை நீக்கிக் கண்ணுக்குத் தோற்றிக் கொண்டிருக்கும்.

பிராண லிங்கம்-தோன்றித் தோன்றாவுருவாய் மனதென்னும் பொருளுக்குத் தோற்றிக் கொண்டிருக்கும்.

பாவலிங்கம்- தோன்றாவுருவாய் அறிவென்னும் பொருளுக்குத் தோற்றிக் கொண்டிருக்கும்.

இஷ்டலிங்கமே கிரியை அல்லது செய்கை உருவமான பொருள், பிராண லிங்கமே மந்திரம் அல்லது ஒலி உருவமான பொருள். பாவலிங்கமே அறிவு அல்லது ஞானம் உருவமான பொருள்."

(வீரசைவப்பிரமாணம்)

"இலிங்கஸ்தலம், வேதா-மநு-கிரியா என்னும் மூன்று தீக்ஷையினாலும் நாதம்-விந்து-கலைகளின் சம்பந்தத்தினாலும் முறையே பாவலிங்கம்-பிராணலிங்கம்-இஷ்டலிங்கம் என்று மூன்று வகைப்படும், பாவத்தினால் (கருத்தால்) கிரகிக்கக் கூடிய ஸத் ரூபமான பாவலிங்கமே நிஷ்களம் (அருவம்) ஆகும். மனத்தினால் கிரகிக்கப்பட்ட சித் ரூபமான பிராண லிங்கமே சகள நிஷ்களம் (உருஅருவம்) ஆகும். கட்புலனால் கிரகித்தற்குரிய ஆனந்த ரூபமான இஷ்டலிங்கமே சகளம் (உருவம்) ஆகும்.

இஷ்டலிங்கமாவது புறத்தில் தோன்றும் ஸ்தூல தத்துவாத்மகமாயுள்ளது.

பிராணலிங்கமாவது அகத்தில் தோன்றும் சூக்ஷ்ம தத்துவாத்மகமாயுள்ளது

பாவலிங்கமாவது அகத்திலும் புறத்திலும் அகண்டாகாரமாய்த் தோன்றும் பரதத்துவாத்மக மாயுள்ளது. (வீரர்சாரக் கட்டளை)

''திரம்பெறும் இலிங்க மூன்று திறத்ததாம், தூல லிங்கம்
பரம்பெறு சூக்குமம் பின் பராற்பரம் என்னத், தூலம்
கரம்பெறும் இட்டலிங்கம், கருத்தது சூக்குமந் தான்,
நிரம்புறும் இலிங்கந்தானே நிகழ்பராற் பரம் என்றோர்வாய்''

(கருத்தது : மனத்தினிடத்துள்ளது. சூக்குமம்-சூக்குமலிங்கம்,
பராற்பரலிங்கம்-பாவலிங்கம். —பிராணலிங்கம்)

(சித்தாந்த சிகாமணி, இலிங்கத்ாரணத் தலம்-செய்.20)

''மாட்சியாய்ப் பிரம மிக்க சிவமென மருவியன்றே
ஆட்சியாம் அநிட்டமெல்லாம் அகற்றியே யிட்டமாகிக்
காட்சியால் நிகழ்வதாம் சிறந்த பிராணம் லிங்கம்''
(சித். சிகா.டி-செ. 22)

''அநிட்டம் நின்றகற்றி. இட்டநன் குதவி என்கரத்திருக்கும்
ஈசனே மாசிலா மணியே'' (நெடு. நெடி. செய். 4)

''அறிவுற்று, என் அங்கைமலர் செறிவுற்று அமர்ந்தஇறை அபிடேகமாடியருளே.''
(இ. அபி-1)

''காயத்தினும் மனத்தும் காதலுறும் பாவகத்தும்
மாய முடிக்க மகிழ்ந்தருளால்-ஆய
சகளாதிகள் உடலிற் சம்பந்தம் சற்றும்
அகலாமை தான்சைவ மாம்'' (அ வெ செ. 13)

(சகளாதிகள்-சகளம், சகள நிட்களம், நிட்களம் இவை முறையே இஷ்ட பிராண பாவ லிங்கங்கள்)

''இஷ்ட லிங்கம் என்பானேனில் தனது அநிட்டமாகிய மலமாயாதி கன்மங்களைப் போக்கி இஷ்டமாகிய சிவாநந்தாநுபூயைக் கொடுக்கையால் இஷ்டலிங்கமெனப் பெயராயிற்று''

(அ.வெ.செ.52வரை)

என்பன ஈண்டு அறியத்தக்கன.

## ஆறு இலிங்கம். (ஷட் வித லிங்கம்)

5. ஆசார லிங்கமுடன் ஆருங் குருலிங்கந்
தேசாரும் இட்டலிங்கம் சேர்ந்தாகும் என்றானோ.

6. அந்தப் பிராணலிங்கத் தாகும் சிவலிங்கம்
இந்தச் சரலிங்கம் என்றசிவ ஞானியோ.

7. பாவலிங்கந் தன்னில் பரமப் பிரசாதந்
தாவகன்ற மாலிங்கந் சார்ந்துவரும் என்றானோ.

பொருள் :

5. தேசு ஆரும் இட்டலிங்கம்-ஞான ஒளி நிறைந்த இஷ்ட லிங்கமானது. ஆசாரலிங்கமுடன் ஆருங் குருலிங்கம் சேர்ந் தாகும் என்றானோ. ஆசார லிங்கத்துடன் அருள் நிறைந்த குருலிங்கமும் சேர்ந்துவரும் என்றருளியவனோ.

6. அந்தப் பிராணலிங்கத்து-மேற் கூறிய பிராணலிங் கத்து, சிவலிங்கம்-சிவலிங்கமும், இந்தச் சரலிங்கம் (சேர்ந்து) ஆகும் என்றானோ-இங்குக் கூறப்பெறும் சங்கம லிங்கமும் உடனாகுமென்று அருளிய சிவஞானியோ.

7. பாவலிங்கந் தன்னில் - பாவலிங்கத்தில், பரமப் பிரசாதம் தா அகன்ற மாலிங்கம் சார்ந்து வரும் என்றானோ- மேலான பிரசாத லிங்கமும் குற்றமற்ற மகாலிங்கமும் உடனாக வரும் என்றருளியவனோ. (தா:குற்றம்)

இவற்றால் இஷ்டலிங்கம் என்பதே ஆசாரலிங்கம் குருலிங்கமென இருவகையாகியும், பிராண லிங்கம் என்பதே சிவலிங்கம் சங்கமலிங்கமென இருவகையாகியும், பாவலிங்கம் என்பதே பிரசாதலிங்கம் மகாலிங்கமென இருவகையாய் ஆகியும் ஆறு லிங்கங்களாயினவாறு உணர்த்தப்பெற்றது.

## அங்கத் தலம்

## மூன்று அங்கம்-(திரிவித அங்கம்)

8. ஏகாங்க மேயாகும் இன்பத் தியாகாங்கம்
போகாங்கம் யோகாங்கம் போற்றியறி யென்றானோ.

பொருள் :

ஏக அங்கமே-முற்கூறிய ஒரு சிவத் தலமே, இன்பத் தியாகாங்கம் போகாங்கம் யோகாங்கம் ஆகும் போற்றி அறி என்றானோ-இன்பம் பொருந்திய தியாகாங்கம் என்றும் போகாங்கம் என்றும் யோகாங்கம் என்றும் மூவகைத்தாம்; இதனை உளத்துக் கொண்டறிக என்றருளியவனோ,

விளக்கம் ;

ஏக+அங்கம்=ஏகாங்கம். தியாக+அங்கம்=தியாகாங்கம். போக+அங்கம்=போகாங்கம். யோக+அங்கம்=யோகாங்கம் தீர்க்கசந்தி. அங்கம்-ஆன்மா.

இலிங்கத்தலம் இஷ்ட - பிராண - பாவ லிங்கங்களென மூன்றானதற்கேற்ப, அங்கத் தலமும் தியாகாங்கம்-போகாங்கம்-யோகாங்கம் என மூன்றாயிற்று.

**தியாகாங்கமானது** சமுசாரப் பிராந்தி பரித்தியாகமே (உலகப் பற்று நீக்கமே) லக்ஷணமாயுள்ளது.

**போகாங்கமானது** சிவப் பிரசாத சேவையினாலுண்டான சுக பரிணாமமே லக்ஷணமாயுள்ளது.

**யோகாங்கமானது** சிவனது ஐக்கியானுசந்தான லக்ஷணமாயுள்ளது.

தியாகாங்கம் இஷ்டலிங்கத்திற்கும், போகாங்கம் பிராணலிங்கத்திற்கும், யோகாங்கம் பாவலிங்கத்திற்கும் இடமாய் விளங்கும்.

"கண்ணுடைக் குறையால் சுடர்பலவாகிக்
  காட்டல் போற் காரண முதலாப்
பண்ணுடல் திறஞ்சேர் என்திருக் கதனால்
  பலவுரு ஆயினை ஒருநீ."

(குறு-நெடில். செ-4)

(கண்ணின்கண் அமைந்துள்ள காசம் என்னும் நோயால் ஒருசுடர் பல சுடராகக் காணப்படுதல் போலக் காரண உடல் முதலாக அமைந்துள்ள வகையினைப் பெற்றுள்ள எனது குற்றத்தால் ஒருவனாகிய நீ இஷ்ட-பிராண-பாவ இலிங்கங்களென்னும் பல உருவங்களைப் பெற்றாய்) தூலவுடல்-பருவுடல், சூக்குமவுடல்-நுண்ணுடல் காணப்படாததால் சூக்குமம் எனப்பட்டது. காரணவுடல் - தூல சூக்கும தேகங்களாகிய இரண்டிற்கும் காரணமாயுள்ளது.

"இதனால் ஒன்றாகிய சிவத்தலம் மூவகைத்தாமாறு உணர்த்தப் பெற்றது.

## ஆறு அங்கம். ஷட்வித அங்கம்.

9. பத்தனுமா கேசனுமாம் பன்னும் தியாகாங்கம்
  உய்த்துணரின் என்ன புணர்த்தும் பெருமானோ.

10. பிரசாதி யோடு பிராணலிங்கி யாகும்
உரைசாரும் போகாங்கம் ஒன்றென்று சொன்னானோ.

11. சாற்றுமியோ காங்கஞ் சரணன் அயிக்கியனாம்
போற்றிநீ காணென்று போதித்த தேசிகனோ.

பொருள் :

இம்மூன்று கண்ணிகளில் மேற்கூறிய மூன்று அங்கங்களும் ஒவ்வொன்று இரண்டுவகையாகித் தியாகாங்கம் பக்தன்-மகேசன் என்றும், போகாங்கம் பிரசாதி-பிராணலிங்கி என்றும், யோகாங்கம் சரணன்-அயிக்கியன் என்றும் ஆறு அங்கங்களாயினவாறு உணர்த்தப் படுகிறது.

9. பன்னும் தியாகாங்கம்-சிறப்பித்துச் சொல்லப்பெறும் தியாகாங்கம். உய்த்துணரின் -ஆராய்ந்து அறியுங்கால், பத்தனும் மாகேசனுமாம் என்று உணர்த்தும் பெருமானோ-பத்தனும் மகேசனும் (என இரண்டு) ஆகும் என்று அறிவிக்கும் பெருமானோ.

10. உரைசாரும் போகங்கம் ஒன்று-புகழ் பொருந்திய போகாங்கமாகிய ஒன்று, பிரசாதியோடு பிராணலிங்கி ஆகும் என்று சொன்னானோ-பிரசாதியும் பிராணலிங்கியும் (என இரண்டு) ஆகும் என்று அருளியவனோ.

11. சாற்றும் யோகாங்கம்-சொல்லப்பெறும் யோகாங்க மானது, சரணன் அயிக்கியனாம் நீ போற்றிக் காண் என்று போதித்த தேசிகனோ-சரணனும் அயிக்கியனும் (என இரண்டு) ஆகும் இவற்றை நீ உளத்துக் கொண்டறியவாயென்று உப தேசித்த ஞானகுரவனோ.

# அங்கத்தலத்தில் கூறப்பெற்ற அறுவர்க்குரிய இலக்கணம்

## 1. பக்தன்

"ஈசன் அருள் திருவேடங் கண்டளவே தரியாது

எழுந்திறைஞ்சல், குரு லிங்க சங்கமம் ஒன்றெனவே

தேசிகனால் அறிந்து பொருள் உடல் உயிரும் அவர்பால்

செலுத்திடுதல், உறவுசிவ பத்தரென மருவிப்

பாசவுற வெனுமுலக விகாரமயல் அகற்றல்

பத்தனியல்பு ஆகுமெனப் பகர்ந்திடும் ஆகமமே.''

(பரம.ச.செ.20)

(சிவ வேடங்கண்ட அளவில் விரைவில் எழுந்து வணங்கல், குரு லிங்க சங்கமம் ஒரு பொருளென்றறிந்து பொருள் உடல் உயிர் மூன்றையும் அவரிடத்தில் செலுத்திச் சிவபத்தரே உறவென்று கருதிப் பாசவுறவாகிய உலக விகார மயக்கங்களை விட்டிருத்தல் பத்தனுக்கியல்பாம்)

## 2. மகேசன்

''பர நாரி பரதிரவி யத்தினுறுந் தொந்தப்

பற்றாகும் நவையகற்றிச் சித்தசுத்த னாதல்

வரமாக லிங்கநிட்டை புரிதல், சிவபத்தர்

மருவுமிட மேவிரும்பல் மகேசன் என்றோதும்''

( ,, செ.21)

(பிறர் மனைவி-பிறர் பொருள் ஆகியவற்றை விழைதலாகிய குற்றங்களை விட்டுச் சித்த சுத்தமுடையவனாகி எக்காலமும் இலிங்க நிஷ்டையுடையவனாகிச் சிவபத்தரிடமே மருவி விரும்பியிருத்தல் மகேசன் இயல்பு என்று ஓதும்.)

## 3. பிரசாதி

''திரமாக லிங்கசமர்ப் பணைநுகரும் பயனைச்
செய்துஅதனை லிங்கநினை வாலுகந்து செலுத்துதல்
விரவாக இலிங்கசமர்ப் பணையில்லா எவையும்
விட்டிடுதல் பிரசாதிக் குற்றநிலை இவையே''
( ,, செ. 22)

(மகாலிங்கத்துக்கு அர்ப்பித்து அதனைத் தானும் இலிங்க நினைவால் உகந்து கொண்டு இலிங்க அர்ப்பிதமில்லாத பொருள்களை அறிவால் விட்டிருத்தல் பிரசாதிக்கு உரிய நிலையாம்.)

## 4. பிராண லிங்கி

''ஓதும் உயிர்ச் செயலினை விட்டின்பத் துன்பம்
ஒழித்துலிங்க நினைவினில்சம் பந்த மாதல்
நீதிதரும் பிராணலிங்கிக் கியல்ப தாகும்''
( ,, செ 22)

(சொல்லப்பட்ட சீவச் செயலெல்லாம் விடுத்து இன்பத் துன்பங்களையும் ஒழித்து எக்காலமும் இலிங்க நினைவிற் சம்பந்தமாயிருப்பது நீதியாகிய பிராணலிங்கிக்கு இயல்பாகும்)

## 5. சரணன்

"நித்தியமாம் சரணன்நெறி நிகழ்த்துங் காலைத்
தீதுறும்ஐம் புலன்அகற்றிச் சதிதா னாகித்
திகழ்பதியே லிங்கமெனச் செறிய லாகும்"

( ,, செ. 24)

(நித்தியமாகிய சரணன் நெறியைக் கூறுமிடத்துக் குற்றம் பொருந்திய ஐம்புலன்களையும் கெடுத்துத் தான் சதியுமாய் தனக்கு இலிங்கமே பதியாய்ப் பொருந்தியிருப்பதாகும்)

## 6. ஐக்யன்

"ஆதிமலம் ஓரைந்தும் இரிய நூறி
அருள்விரவல் அயிக்கியனென் றறையும் நூலே"

( " செ. 25.)

(ஆதி மலமாகிய ஆணவ முதலைந்து மலங்களையும் பஸ்பமாக்கி யொழித்துத் தான் அருள் வடிவமாகியிருப்பது ஐக்யனுக்குரிய இயல்பாகுமென்று ஆகம வாக்கியங்கள் சொல்லும்.)

## அறிந்துகொள்ள வேண்டியவை

ஆசிரியர் இந்நூலில் வீரசைவ சடுத்தல சித்தாந்தத்தைச் சுருங்கச் சொல்லல் என்னும் முறையில் நுண்பொருள்களையடக்கிக் கூறுதலால் பின்வரும் விழுமிய கருத்துக்களையுணர்ந்துகொள்ள முன்னதாகச் சில கருத்துக்களை அறிந்து கொள்ளல் வேண்டும். அவற்றைக் காண்போம்,

எல்லா தத்துவங்களுக்கும் உற்பத்தியிடமாகவும் யாவும் ஒடுங்குதற்கு இடமாகவும் இருக்கும் பரப்பிரமமே பரசிவத்தலம் என்று சொல்லப்படும். அந்தப் பிரமமே தன்னில் இடைவிடாமல் அடங்கியிருக்கும் சித் சத்தியின் லீலையால் உலகவுற்பத்தி காரணமாக அலையில்லாத சமுத்திரத்தில் வாயுவின் சலனத்தினால் அலை நுரை முதலியன உண்டாதல்போல **இலிங்கத்தலம் அங்கத்தலம்** என இரண்டாயிற்று இலிங்கம் வழிபாட்டிற்குரியதாகவும் அங்கம் (ஆன்மா) வழிபாடு செய்பவனாகவும் இருக்கும். பரசிவத்தலம் அவ்வாறாகவே அதன்கண் அடங்கிய சித்சத்தியும் தனது சுதந்தரத்தினாலும் உயிர்களிடத்துக் கொண்ட கருணையாலும் **சத்தி** என்றும் **பத்தி** என்றும் இருவிதமாயிற்று. சத்தியைக் கலை என்றும் பரை என்றும் மாயை என்றுங் கூறுவர்.

நெருப்பு ஒன்றே பல சுடராதல்போல மகாசத்தி (அ)சித் சத்தியொன்றே தனது லீலாவிநோதத்தால் சித்சத்தி-பராசத்தி ஆதிசத்தி-இச்சா சத்தி-ஞானசத்தி-கிரியாசத்தி யென அறுவிதமாகும். இவை முறையே மகாலிங்கம்-பிரசாத லிங்கம்-சங்கம லிங்கம் - சிவலிங்கம் - குருலிங்கம் - ஆசாரலிங்கம் என்னும் இவற்றுடன் இணையும். அவ்வாறே பத்தியும் சத்பத்தி-நயிஷ்டாபத்தி - அவதானபத்தி - அநுபவபத்தி - ஆனந்தபத்தி சமரசபத்தி என அறுவிதமாகும். அவை முறையே பத்தன் முதலிய அங்கத்தலத்துடன் இணையும்.

| இலிங்கத் தலம் | அங்கத் தலம் |
|---|---|
| 1) ஆசாரலிங்கம்+கிரியா சத்தி | 1) பத்தன்+சத்பத்தி |
| 2) குருலிங்கம்+ஞான சத்தி | 2) மகேசன்+ நயிஷ்டா பத்தி |
| 3) சிவலிங்கம்+இச்சா சத்தி | 3) பிரசாதி+அவதாந பத்தி |
| 4) சங்கம லிங்கம்+ஆதி சத்தி | 4) பிராண லிங்கி+அநுபவபத்தி |
| 5) பிரசாத லிங்கம்+பராசத்தி | 5) சரணன்+ஆனந்த பத்தி |
| 6) மகா லிங்கம்+சித்சத்தி | 6) ஐக்யன்+சமரச பத்தி |

உலகிற் பிறந்த பயன்பெற விழைவார் ஒரு பிறப்பிலேயே தம் சீலத்தாலும் இலிங்காநுபவத்தாலும் திருவருளால் பத்தன் முதலாக ஐக்யன் ஈறாகவுள்ள நிலையினையடைவர். இது பள்ளியிற் கல்வி பயில்வார் தம் தரத்திற்கேற்ப மாறி மாறிச் செல்வது போன்றதோர் ஆன்ம வளர்ச்சியும் சிவ நெறியுமாம். பிறப்பினாலோ பிறவற்றாலோ ஏற்படுவதன்று. ஷடுஸ்தல இலிங்கங்களைப் பற்றிய விளக்கம் இனி வரும் இடங்களிற் காணப் பெறும்.

## பத்தன் முறையே ஐக்யனாதல்

பல பிறப்புகளில் செய்த புண்ணியத்தால் தீவினை நீங்கிப் புனிதமான மனத்தைப் பெற்றவன் பிண்டம் என்னும் மூர்த்தி பிரமப் பெயரையடைவான்.

"அந்தக் கரண சுத்தியினால் அடைவன் பிண்டப் பெயர்" என்னும் பிரபுலிங்க லீலை. (மனோலய கதி செ.11) இது வீர சைவ சித்தாந்தத்தில் நூற்றொரு தலத்தில் முதலாவதாம்.

1. அந்தப் பிண்டப் பெயரோன் சத்பத்தியால் பக்தத் தலத்தை அடைவான், அதன் பின்னர் பக்தியையும் நற் கருமத்தையும் செய்து பக்தன் ஆசாரலிங்கத்தில் சம்பந்த முடையவ னாவான்.

2. அந்தப் பக்தத் தலத்திலிருந்த சத்பத்தியானது நிஷ்டை யினால் நிறைவு பெறுவதால் அது நயிஷ்டிக பத்தியெனப்படும். அந்தப் பத்தியினால் ஆன்மாவிற்கு மகேசுவரத் தலம் உண்டா கும். மகேசுவரன் குருலிங்கத்தில் சம்பந்தமுடையவனாவான்.

3. அந்த மகேசுவரத் தலத்திலிருந்த நயிஷ்டிக பத்தி யானது காமம் முதலியவற்றால் மாசடையாது சாத்விகமான

மனவுறுதியை யடைவதனால் அஃது அவதான பத்தி யெனப் படும். அந்த அவதான பத்தியினால் பிரசாதித் தலம் உண்டாகும். பிரசாதி சிவலிங்கத்தில் சம்பந்தமுடையவனாவான்.

4. அந்தப் பிரசாதித் தலத்திலுள்ள அவதான பத்தி யானது சுவாநுபவத்தின் சம்பந்தமடைவதனால் அஃது அநுபவ பத்தியெனப்படும். அந்த அநுபவ பத்தியினால் ஆன்மாவிற்குப் பிராணலிங்கித் தலம் உண்டாகும். பிராணலிங்கி சங்கம லிங்கத்தில் சம்பந்தமுடையவனாவான்.

5. அந்தப் பிராண லிங்கித் தலத்திலுள்ள அநுபவ பத்தி யானது ஆனந்தயோகமடைவதனால் அஃது ஆனந்த பத்தி யெனப்படும். அந்த ஆனந்த பத்தியினால் ஆன்மாவிற்குச் சரணத் தலம் உண்டாகும். சரணம் பிரசாதலிங்கத்தில் சம்பந்த முடையவனாவான்.

6. அந்தச் சரணத் தலத்திலுள்ள ஆனந்த பத்தியானது இலிங்காங்க சாமரஸ்யத்தின் பெருமையை யடைவதால் அது சமரச பத்தியெனப்படும். அந்தச் சமரச பத்தியினால் ஆன்மாவுக்கு ஐக்யத்தலம் உண்டாம் ஐக்யன் மகாலிங்கத்தில் சம்பந்தம் பெறுவான்.

## சத்தி–பத்தி இவற்றின் இயல்புகள்

"சத்தியானது ஆன்மாவுக்கு அந்தரங்கமாய் மந்திர தந்திரங்களாய் அனேக கோடி தத்துவங்களாய் அனேக தனு கரண புவன போகங்களாய்ப் பகிரங்கமாய்க் கிரியைகளைச் செய்வித்து மலபாகம் வரச்செய்யும்.

**பத்தியானது** அங்கஸ்தலமான ஆத்மாவுக்கு அந்தரங்கமாய்த் தான் பிரமமாய் நிற்றல் திடமாகச் செய்வது."

(த.நி சா.வீரசைவம்)

''நெருப்பின் ஜ்வாலையானது புகையினால் மூடப்பட்டிருக்கும்போது வெளிச்சத்தைப் பரவவிடாமல் மங்கியிருப்பது போலச் சத்தியானது வாசனையால் மூடப்பட்டிருக்கும். பத்தியானது புகையில்லாத பிரகாசமுள்ள ஜோதி போல வாசனையற்றதாயிருக்கும். மேலும் மஹத்தரமும் சூக்ஷ்மமுமாயுள்ளது; மோக்ஷத்தையும் கொடுக்கக் கூடியது. சத்தியானது புண்ணிய பலத்தைக் கொடுப்பது. அதனால் உலக சிருட்டிக்கு வழியாயுள்ளது. பத்தியினால் உலகம் லயமாகிறது. (லயம்-ஒழுக்கம்) சத்தியின் விசித்திர குணத்தினால் அருபமும் ருபமாகிறது. உலக விருத்தியை அபேக்ஷிப்பதே சத்தியின் இயற்கைக் குணம், உலக லயத்தை அபேக்ஷிப்பதே பத்தியின் இயற்கைக் குணம். சத்தியானது மாயா சம்பந்தமுள்ளது. பத்தியானது மாயா சம்பந்தமற்றது. சத்தியானது அதோமுகி என்னும் பிரவிருத்தி மார்க்கமுள்ளதென்றும், பத்தியானது. ஊர்த்துவ முகியென்றும் நிவர்ம்தி மார்க்கமுள்ள தென்றும் சொல்லப்படும்.

ஆதலால், **சத்தியினும் பத்தியே சிறப்புடைத்தாம். சத்திக்கு உபாஸ்யத்வம் (உபாசிக்கப்படுந்தன்மை) உண்டாயிற்று அதனால் அது லிங்கஸ்தலத்தை ஆஸ்ரயித்தது. பத்திக்கு உபாஸனாத்வம் உண்டாயிற்று. அதனால் அது அங்கஸ்தலத்தை ஆஸ்ரயித்தது.** (வி.க.)

வாசனை-வாசனா மலம் (முற்பிறப்பின் நினைவிற்குக் காரணமாக உள்ளது.)

## நவ லிங்கம்.

12. அங்க நவவிதமும் அந்தநவ லிங்கமோடு
தங்கும் எனஎனக்குச் சாற்றும் பெருமானே.

பொருள் :

நவவித அங்கமும்-ஒன்பது வகையான அங்கமும் (ஆன்மாவும்) அந்த நவலிங்க மொடு-மேற் கூறிய ஒன்பது இலிங்கங்களுடன், தங்கும் என எனக்குச் சாற்றும் பெருமானோ-சேர்ந்திருக்குமென்று (ஐக்யமாகுமென்று) அடியேனுக்கு உபதேசிக்கும் பெருமானோ.

விளக்கம் :

**ஒன்பது அங்கமாவன :** 1. தியாகாங்கம், 2. போகாங்கம். 3. யோகாங்கம். 4, பத்தன். 5 மகேசன். 6, பிரசாதி. 7. பிராண லிங்கி. 8. சரணன், 9, ஐக்யன்.

**ஒன்பது இலிங்கங்களாவன :** 1. இஷ்ட லிங்கம். 2 பிராண லிங்கம் 3. பாவலிங்கம். 4. ஆசார லிங்கம், 5. குருலிங்கம். 6. சிவ லிங்கம். 7. சங்கம லிங்கம், 8. பிரசாத லிங்கம். 9. மகா லிங்கம்.

தியாகாங்கம் முதலிய ஒன்பது அங்கங்களில் முறையே இஷ்டலிங்கம் முதலாய ஒன்பது இலிங்கங்கள் குருவருளால் பதிதலுறும்.

## காயார்ப் பணம்

காயார்ப் பணமாவது சிவயோகி இலிங்க பூஜா விஷ்யத்தில் தேகாபிமானத்தைத் தியாகம் செய்வதாம்.

''அருள்செய் அப்பர யோகிதான் அருச்சனைப் பொருட்டு
மருள்செய் இவ்வுடல் மானமற் றிடுவதே மதிப்பில்
தெருள்செய் கின்ற **காயார்ப்பிதம்** என்றுரை செய்வர்
இருள்செய் வெம்பவம் அகன்றுநல் லறிவறிந் திருப்போர்''
என்னும் சித்தாந்த சிகாமணி, (காயார்ப் பிதத்தலம் செ.1)

(அருச்சனை - பூசை. மானம் - அபிமானம், பற்று. வெம்பவம்-கொடிய பிறப்பு)

குருவானவர் மாணவனுடைய காரண உடலில் வேதா தீக்ஷையினால் பாவலிங்கத்தையும், நுண்ணுடலில் மந்திர தீக்ஷையினால் பிராண லிங்கத்தையும், பருவுடலில் கிரியா தீக்ஷையினால் இஷ்ட லிங்கத்தையும் பிரதிட்டை செய்தருள் வார். இவ்வாறு அங்கத்திலே பிரதிட்டை செய்யப்பெற்ற இலிங்கம் சர்வாங்கத்திலேயும் படிகக் கடத்துள் வைத்த விளக் குப்போல் அகத்தும் புறத்தும் விளங்கியிருக்கும். எவ்வா றெனில், ஞானேந்திரியங்களாகவுள்ள மனத்தில் மகாலிங்கமும் மூக்கில் ஆசாரலிங்கமும் நாவில் குருலிங்கமும் கண்ணில் சிவ லிங்கமும் உடம்பில் சங்கமலிங்கமும் செவியில் பிரசாத லிங்கமும் விளங்கா நிற்கும், இவ்வாறே கன்மேந்திரியங்களிலும் விளங் கும். **இது சர்வாங்க லிங்க சாகித்யம்.**

இவ்வாறு இலங்கா நின்ற ஆசாரலிங்க முதலிய இலிங்கங் களுக்கு அநுபவிக்கும் பொருள்களை அர்ப்பிதம் செய்து அவற்றை மீண்டும் ஆன்மா சிவப்பிரசாதமாகக் கொள்ளல் அர்ப்பித முறையாம்.

13. விழுங்கல் பருகலோடு மெல்லல் ஆசாரம்
ஒழுங்கில் குருசிவமும் உற்றிடுமிங் கென்றானோ.

14 சோகிய லேகியமும் சொன்ன இவற்றறிவும்
ஏகியுறும் பின்முன் றிலிங்கத்தும் என்றானோ.

15. இந்தக் **காயார்ப்பணங்கள்** இட்டலிங்கத்து என்றெனக்குச்
சந்தப் படவுரைத்துத் தந்தசிவ ஞானியோ.

## இம்மூன்று கண்ணிகளில் காயார்ப்பணம் உணர்த்தப்பெறும்

பொருள் ;

13) இங்கு-இந்நிலையில், விழுங்கல் பருகலொடு மெல்லல்-விழுங்குதற்குரிய பொருளும் பருகுதற்குரிய பொருளொடு மெல்லுதற்குரிய பொருளும், ஒழுங்கில், ஆசாரம் குரு சிவமும் உற்றிடும் என்றானோ-முறையாக ஆசாரலிங்கத்தையும் குருலிங்கத்தையும் சிவலிங்கத்தையும் அர்ப்பிதப் பொருளாகச் சென்றடையும் என்றருளியவனோ.

14) சோகிய லேகியமும்-உறுஞ்சுதற்குரிய பொருளும் நக்குதற்குரிய பொருளும், சொன்ன இவற்றறிவும் கூறப்பெற்ற இவற்றாலுறும் உணர்வும் (திருப்தியும்), பின் மூன்று இலிங்கத்து ஏகியுறும் என்றானோ-பின்னருள்ள மூன்று இலிங்கங்களாகிய சங்கம லிங்கத்தும் பிரசாத லிங்கத்தும் மகாலிங்கத்தும் அர்ப்பிதப் பொருளாகச் சென்றடையும் என்றருளியவனோ.

15) இந்த-இவ்வாறுள்ள, இட்டலிங்கத்து காயார்ப்பணங்கள்-இஷ்ட லிங்கத்துக்குச் செய்யும் காயார்ப் பணங்களை, என்றெனக்குச் சந்தப்பட உரைத்துத் தந்த சிவஞானியோ-அடியேனுக்கு அழகு பெறவுரைத்து அநுபவத்திற்குக் கொணர்ந்த சிவஞானியோ

விளக்கம் :

விழுங்கல்-பருகல்-மெல்லல் தொழிலாகு பெயர்கள்.
சோகியம்-உறுஞ்சுதற்குரிய பொருள்.
இலேகியம்-நக்கப்படுவது.





"அற்பிதந்தான் மூன்றுவகைப் படும தென்றே
அறையுங்கால் காயார்ப் பிதந்தா னென்றும்
அற்பயிலும் கரணார்ப் பிதந்தா னென்றும்
மருவியநற் பாவார்ப் பிதந்தா னென்றும்
சொற்பயிலும் இவைமூன்றில் காயார்ப்பி தந்தான்
சொல் தனுவிற்காம், அதனால் தொழிலே செய்யில்
முற்படவே பிடித்துண்ணும் பதார்ந்தந் தானே
முறைமையில் ஆசாரலிங்கத் தர்ப்பிதமாம்
மொழியில்.''
(மிசர-ச.செ.3)

''அங்கையினால் குடிக்கைகுரு லிங்கத் துக்கே
ஆகு; மெல்லல் தான்சிவிலிங் கத்துக் காகும்
இங்கிதமாய் உறுஞ்சுகின்ற பதார்த்தந் தானே
எழிலாரும் சங்கமலிங் கத்துக் காகும்
தங்கியநற் பதார்த்த நக்கல் பிரசாத லிங்கம்
தனக்காகும், இவைகளின் நற்றிருத்தி யெல்லாம்
துங்கமா லிங்கத்துக் காகு மென்று
சொல்லும்கா யார்ப்பிதத்தைத் துணிந்து நூலே.''
என் உரைத்தலும் காண்க.
(மிசர.ச.செ.4)

## சிவலிங்கத் திருவுருவில் ஆறு சிவலிங்கங்களுக்குரிய தானம்.

16. பீடம்இடை வட்டம் பெருங்கோ முகநாளம்
ஆடலுறு கோளகமா சாராதிக் கென்றானோ.

பொருள் :

பீடம் இஷ்ட வட்டம் பெருங்கோமுகம் நீளம்-இலிங்கத் திருவுருவிலுள்ள பீடம்-நடு-வட்டம்-பெருமை பொருந்திய கோமுகம்-நாளம், ஆட்லுறு கோளகமும்-யாவற்றையும் ஆளு தலையுடைய கோளகம் ஆகிய இவை, ஆசாராதிக்கு என்றானோ-ஆசாரலிங்க முதலிய இலிங்கங்கள் எழுந்தருளி யிருப்பதற்குரிய தானமாகும் என்றருளியவனோ.

விளக்கம் :

பீடம் முதலிய ஆறு கலைகள் இலிங்கத் திருவுருவின் கண் உள்ளன. பீடத்தில் ஆசாரலிங்கமும் இஷ்டத்தானத்தில் குரு லிங்கமும் வட்டத் தானத்தில் சிவலிங்கமும் கோமுகத்தில் சங்கம லிங்கமும் நாளத்தானத்தில் பிரசாத லிங்கமும் கோளகத்தில் மகா லிங்கமும் எழுந்தருளி விழிபார்ட்டின் ஏற்று அருள்புரியும். மற்றும் இவை நகார முதலாகிய திரு ஐந்தெழுத்துக்களையும் பிரணவத்தையும் முறையே உடையன. மற்றும், பீடமே இஷ்ட லிங்கமாகவும், நாளமே பிராணலிங்கமாகவும், கோளகமே பாவலிங்கமாகவும் இருக்கும். மற்றும், நாளம் சத்தி உருவ மாகவும், கோளகம் சிவ உருவமாகவும் இருக்கும்.

ஆடல் = ஆன் + தல்; நீராட்டலை ஏற்றுக் கொள்ளும் எனினுமாம்.

இக்கண்ணி சிங்கநோக்காக அமைந்துள்ளது. மேற்கூறி யது காயார்ப்பிதம், இனி சொல்லப்பெறுவன கரணார்ப்பிதம்-பாவார்ப்பிதம். இவ்வர்ப்பிதங்களை ஆசாரலிங்க முதலியவை தனித்தனியாகத் திருமேனி கொண்டு ஏற்றுக் கொள்ளுமோ என்ற ஐயந்தோன்று மன்றோ. அதனை நீக்கும் பொருட்டுக் கரதலத்தில் எழுந்தருளியுள்ள இலிங்கத் திருமேனியிலேயே, ஆறு இலிங்கங்களும் அடங்கியுள்ளன. அவை இவ்வர்ப்பிதங் களை யேற்றருளும் என்னும் நுண் பொருளை உய்த்துணர வைத்துள்ள அருமையை அறிக.

''கோலந் தரும்அடி நாப்பண் விருத்தநற் கோமுகமா
ஞாலங் கருதருங் கோமுகந் தம்மில் நயந்தடியேன்
சீலங் கொளும்அருள் ஆசார மாதி திகழ்ந்துநிற்கு
மூலங் கரணங் கலந்தங்கை மேவிய முக்கண்ணனே''
(நிர-மா.செ,12)

(விருத்தம்-வட்டம், ஞாலம்-நாளம்; மூலம்-மூலாதாரம். கரணம்-அந்தக் கரணம்)
என்பது ஒப்பிடத்தக்கது.

## கரணார்ப் பிதம்

காயார்ப்பிதம் செய்த சிவயோகி சகல இந்திரியங்களையும் இலிங்கத்தில் சேர்ப்பதே கரணார்ப்பிதமாம்.

''ஆதியாகிய சிவத்தினில் கரணங்க ளனைத்தும்
வேதியா அதனிடைப் புணர்த்திடுதலே விளங்கத்
தீதில்நூல் **கரணார்ப்பிதம்** என்னவே தெரிக்கும்
பூதநாயகன் அருள்கொடு பொதியிலிற் புகுந்தோய்''
(சித்.சிகா,கரணார்ப்பிதத்தலம், செ.1)
(வேதியா-வேதித்து, நிவேதித்து. புணர்த்திடுதல்-சேர்த்தல்.)

**17.** நாற்றம் சுவையுருவ நல்லூறு ஒலிநிறைவு
சாற்றுஞ் சடுலிங்கஞ் சாருமெனச் சொன்னானோ.

பொருள் :

நாற்றம் சுவை உருவம் நல்லூறு ஒலி நிறைவு-மணம், உருசி, உருவம், நல்ல பரிசம், ஒலி, ஆகிய இவையும் இவை ஐந்தினையும் அநுபவிக்குங்கால் உண்டாகும் திருப்தியும், சாற்றும் சடுலிங்கம் சாரும் எனச் சொன்னானோ சொல்லப்

பெறும் ஆறு இலிங்கங்களை முறையே அர்ப்பிதப் பொருளாக அடையும் என்றருளியவனோ.

விளக்கம் :

அங்கத்தில் பிரதிட்டை செய்த ஏகலிங்கமே ஆறு இந்திரியங்களிலும் விளங்குமென்பது முன்னர் அறிந்ததே. அங்ஙனமாக மூக்கிலே எழுந்தருளியுள்ள ஆசாரலிங்கத்திற்கு மூக்கே முகமாய் மணப்பொருள் அர்ப்பிதமாம். நாவில் எழுந்தருளியுள்ள குருலிங்கத்திற்கு நாவே முகமாய்ச் சுவைப் பொருள் அர்ப்பிதமாம். கண்ணிலே எழுந்தருளியுள்ள சிவலிங்கத்திற்குக் கண்ணே முகமாய் உருவப் பொருள் அர்ப்பிதமாம். உடலிலே எழுந்தருளியுள்ள சங்கமலிங்கத்திற்கு உடலே முகமாய் ஊறு என்னும் பொருள் அர்ப்பிதமாம். (உடல்= தோல்) செவியில் எழுந்தருளியுள்ள பிரசாத லிங்கத்திற்குச் செவியே முகமாய் ஒலியாகிய பொருள் அர்ப்பிதமாம் மனத்தின் கண்ணே எழுந்தருளியுள்ள மகாலிங்கத்திற்கு மனமே முகமாய் ஐந்து அறிவுக் கருவிகளாலுறும் திருப்தி அர்ப்பிதமாம்.

"ஆசார லிங்கத்து அர்ப்பிதமாம் கெந்தம்,
ஆனகுரு லிங்கத்துக் காம்இரதந் தானே,
நேசாருஞ் சிவலிங்கத்து ரூப மாகும்,
நித்தியசங் கமலிங்கம் பரிச நேரும்,
பேசாரும் பிரசாத லிங்கத் துக்குப்
பெற்றியினால் சத்தமர்ப் பிதமே யாகும்,
தேசாரு மாலிங்கந் தனக்கிவ் வைந்தாற்
செறிந்தபரி ணாமமெல்லாந் திருத்தி யாமே"

என்பதும் காண்க.

(மிசிர.ச.செ.6)

## 1. நாற்றம்=மணம்

18. வேர் முதலாங் கந்தம், விளங்கு மரமுதலாங்
கூர் மணம், ஆசாரம் குருவினிலாம் என்றானோ.

19. தளிராதி கந்த,முகை தான்முதலாங் கந்தம்,
ஒளிரார் சிவசரத்தின் உற்றிடுமிங் கென்றானோ.

20. காய் முதலாங் கந்த,மெலாங் காசில்பிர சாதத்துத்
தூய்மலிமா லிங்கத்துத் துன்னுமெனச் சொன்னானோ.

பொருள்;

18. வேர் முதலாம் கந்தம்-(மூக்கிலிருந்து ஆசாரலிங்கம் மணத்தை அறியும்போது)வேர் முதலிவற்றிலுண்டாகும் மணம். விளங்கு மர முதலாம் கூர் மணம்-விளங்குகின்ற மர முதலிய வற்றிலுண்டாம் மிக்க மணம், ஆசாரம் குருவினில் ஆம் என்றானோ-முறையே ஆசாரலிங்கத்தின்கண்ணும் குருலிங்கத் தின் கண்ணும் அர்ப்பிதப் பொருளாயடையும் என்ற ருளியவனோ.

19. தளிராதி கந்தம் முகைதான் முதலாம் கந்தம்-தளிர் முதலியவற்றில் வரும் மணம் அரும்பு முதலிவற்றில் வரும் மணம் ஒளிர் ஆர் சிவசரத்தின் உற்றிடும் இங்கு என்றானோ-முறையே விளக்கம் பொருந்திய சிவலிங்கத் தின் கண்ணும் சங்கம லிங்கத்தின் கண்ணும் இவ்வாறு அர்ப்பிதம் செய்யும் வகையில் அடையுமென்றருளியவனோ. (தான்-அசை)

20. காய் முதலாம் கந்தம்-காய் முதலியவற்றில் வரும் மணம், எலாம்-கூறப்பெற்றயாவும் (ஐவகை மணத்தின் சேர்க்கை) காசில் பிரசாத்துத் தூய்மலி மாலிங்கத்துத் துன்னும் எனச் சொன்னானோ-முறையே குற்றமற்ற பிரசாத லிங்கத்

தின் கண்ணும் பரிசத்தும் நிறைந்த மகாலிங்கத்தின் கண்ணும் அர்ப்பிதப் பொருளாக அடையுமென்றருளியவனோ.

விளக்கம் :

இம்மூன்று கண்ணிகளால் ஆசாரலிங்க மிசிரம் ஆறினுக்கும் அறுவகைத்தாம் மணம் அர்ப்பிதம் ஆமாறு உணர்த்தப் பெற்றது.

## 1. ஆசாரலிங்க மிசிரம் அறுவகை

1. ஆசார லிங்ககத்தில் ஆசார லிங்கம்
2. ,, ,, குருலிங்கம்
3. ,, ,, சிவலிங்கம்
4. ,, ,, சங்கமலிங்கம்
5. ,, ,, பிரசாத லிங்கம்
6. ,, ,, மகாலிங்கம்

## 1. வேர் முதலாம் கந்தம்.

வேர், கிழங்கு இவற்றில் வரும் மணம் வெட்டிவேர், கோரைக் கிழங்கு முதலியவற்றின் மணம் இஃது ஆசாரலிங்கத்தில் ஆசாரலிங்க திற்காம்.

## 2. மர முதலாம் கந்தம்.

சந்தன மரம், அகில், மட்டிப்பால் முதலியற்றில் வரும் மணம். இஃது ஆசாரலிங்கத்தில் குருலிங்கத்திற்காம்.

## 3. தளிர் ஆதி கந்தம்

தளிர், இலை இவற்றில் வரும் மணம். மருக்கொழுந்து முதலியவற்றில் வரும் மணம். இஃது ஆசாரலிங்கத்தில் சிவலிங்கத்திற்காம்.

## 4. முகை முதலாம் கந்தம்

அரும்பு, பூ இவற்றில் வரும் மணம். இஃது ஆசாரலிங்கத்தில் சங்கம லிங்கத்திற்காம்.

## 5. காய் முதலாம் கந்தம்

காய், பழம் இவற்றில் வரும் மணம். ஏலக்காய், சாதிக்காய் முதலியவற்றில் வரும் மணம். இஃது ஆசார லிங்கத்தில் பிரசாதலிங்கத்திற்காம்.

6. மணங்களின் கலப்பு (பரிணாமம்) ஆசார லிங்கத்தில் மகாலிங்கத்திற்காம்,

"செப்பரிய வேர்கிழங்கு முதலாங் கெந்தம்
திருந்தறியும் ஆசார் லிங்கம். சேர்ந்தே
ஒப்பரிய மரப்பட்டை பிசினி லுண்டாம்
உற்றகெந்தஞ் தனையறியுங் குருலிங்க முகந்தே."
(மிசிர-ச.செய்.7)

"உற்றதளிர் இலையிலுள்ள கெந்தந் தன்னை
யுகந்தறியும் சிவலிங்கம், அரும்பு பூவின்
பற்றுமணந் தனையறியும் சங்கம லிங்கந்தான்,
பகருங்காய் பழமுதலா யுள்ள கெந்தம்
உற்றறியும் பிரசாத லிங்கம், இந்த
முறைமையின் வகைக்கந்த முழுது மெல்லாம்
பெற்றறியு மகாலிங்கம் இவையாறு வகையும்
பேணுமா சாரலிங்க மிச்சிரமம் பேசில்."

என்பன மேற்கூறியவற்றை விளக்கும்.

( ,, ,, செய்.8)

## 2. சுவை

21. மதுரம் துவர்கார்ப்பு வண்புளிகைப் பெல்லாம்
சதுர்என்று இருத்திய ஆசாராதிக் கென்றானோ.

பொருள் :

மதுரம் துவர் கார்ப்பு வண்புளி கைப்பு எல்லாம்-(நாக்கிலிருந்து குருலிங்கம் சுவை அறியும்போது) இனிப்பு-துவர்ப்பு-கார்ப்பு-வளமுள்ள புளிப்பு கசப்பு ஆகிய இவையும் இவை ஐந்து வகையின் கலப்பும் (திருப்தியும்), இருத்திய ஆசாராதிக்கு சதுர் என்று சொன்னானோ-அமைக்கப்பெற்ற ஆசாரலிங்க முதலிய வற்றிற்றிற்கு முறையே உரியனவாமென்றருளியவனோ.

விளக்கம் :

''இனங்கொளல்'' என்பதனால் உப்பும் கொள்க.

இது குருலிங்க மிசிரம் ஆறினுக்கும் அறுவகைத்தாம் சுவை அர்ப்பிதம் ஆமாறு உணர்த்துவதாம்.

### உ. குருலிங்க மிசிரம் அறுவகை

| | | | |
|---|---|---|---|
| 1. | குருலிங்கத்தில் | ஆசாரலிங்கத்திற்கு இனிப்பு | அர்ப்பிதமாம் |
| 2. | ,, ,, | குருலிங்கத்திற்குத் துவர்ப்பு | ,, |
| 3. | ,, ,, | சிவலிங்கத்திற்குக் கார்ப்பு | ,, |
| 4. | ,, ,, | சங்கமலிங்கத்திற்குப் புளிப்பு | ,, |
| 5. | ,, ,, | பிரசாதலிங்கத்திற்குக் கசப்பு | ,, |
| 6. | ,, ,, | மகாலிங்கத்திற்கு யாவும் கலந்த சுவையும் உப்பும் | ,, |

''குருலிங்க மிச்சிரமம் அறுவகைதான் தன்னிற்
குலவும் ஆசாரலிங்கந் தித்தித்தல் கொள்ளும்,

தருதுவர் குருலிங்கத் தாகும், என்னும்
சாற்றரிய சிவலிங்கந் தனக்குக் கார்த்தல்,
கருதுசர லிங்கத்தே புளித்த லாகும்,
காணுபிர சாதத்திற் கசப்ப தாகும்,
மருவியிலை யைத்துடனும் உப்புங் கூட
மலிந்தபரி ணாமமகர் லிங்கத் தாமே.''

என்பது விளக்கிக் கூறும்.

(மிசர-ச. செய், 9.)

## 3. உருவம் (நிறம்)

22, பொன்மைவெண்மை பச்சைசெம்மை போந்த
கருமையெலாம்
நன்மைய ஆசாராதி நண்ணுமென்ற நாயகனோ.

பொருள் :

பொன்மை வெண்மை பச்சை செம்மை போந்த கருமையெலாம் - (கண்ணிலிருந்து சிவலிங்கம் நிறங்களையறியும் போது) பொன்னிறம் வெண்ணிறம் பச்சைநிறம் செந்நிறம் வந்துள்ள கருநிறம் ஆகிய ஐந்து நிறங்களும் இந்நிறங்களின் கலப்பாகிய சித்திர நிறமும் ஆகியவை, நன்மைய ஆசாராதி நண்ணும் என்ற நாயகனே-நன்மையுடைய ஆசாரலிங்க முதலிய இலிங்கங்களை முறையே அடையுமென்றருளிய ஞான நாயகனோ.

விளக்கம் :

இது சிவலிங்க மிசிரம் ஆறினுக்கும் அறு வகைத்தாம் நிறங்கள் அர்ப்பணம் ஆமாறு உணர்த்தியதாம்.

## 3. சிவலிங்க மிசிரம் ஆறு.

1. சிவலிங்கத்தில் ஆசாரலிங்கத்திற்குப் பொன்மை அர்ப்பிதமாம்.
2. ,, ,, குருலிங்கத்திற்கு வெண்மை ,,
3. ,, ,, சிவலிங்கத்திற்குப் பசுமை ,,
4. ,, ,, சங்கம லிங்கத்திற்குச் செம்மை ,,
5. ,, ,, பிரசாத லிங்கத்திற்குக் கருமை ,,
6. ,, ,, மகாலிங்கத்திற்கு சித்திர நிறம் ,,

சித்திர நிறமென்பது நிறங்கள் யாவும் கலந்த நிறம்.

## 4. ஊறு (பரிசம்)

23. வன்மைமென்மை வெம்மைதண்மை வாய்ந்த மிசிர மெலாஞ்

சின்மைய ஆசாராதி சேர்ந்துகொளும் என்றானோ.

பொருள் ;

வன்மை மென்மை வெம்மை தண்மை-கடினம் மெல்லிய தன்மை வெப்பம் குளிர்ச்சி ஆகியவையும், வாய்ந்த மிசிரம் எலாம்-இவை ஒன்றாகக் கலந்த தன்மையும். சின்மய ஆசாராதி சேர்ந்துகொளும் என்றானோ-அறிவு மயமான ஆசாரலிங்கம் முதலிய இலிங்கங்கள் முறையே அர்ப்பிதப் பொருளாகக் கொள்ளும் என்றருளியவனோ.

விளக்கம் ;

இது சங்கமலிங்க மிசிரம் ஆறினுக்கும் அறுவகைத்தாம் பரிசம் அர்ப்பணம் ஆமாறு உணர்த்தியதாம். "இனங்கொளல்" என்பதனால் தினவு என்னும் ஊறு கொள்ளப்பட்டது.

## 4. சங்கம லிங்க மிசிரம் அறுவகை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சங்கம லிங்கத்தில் | ஆசாரலிங்கத்திற்குக் | கடினம் அர்ப்பிதமாம் | |
| 2. | ,, ,, | குருலிங்கத்திற்கு | மென்மை (மிருது) | ,, |
| 3. | ,, ,, | சிவலிங்கத்திற்கு | வெம்மை | ,, |
| 4. | ,, ,, | சங்கம லிங்கத்திற்கு | தண்மை | ,, |
| 5. | ,, ,, | பிரசாத லிங்கத்திற்கு | தினவு | ,, |
| 6. | ,, ,, | மகாலிங்கத்திற்கு மேற் கூறப்பெற்ற ஐந்தின் கலப்பு | | ,, |

"அரியசங் கமலிங்கத் தறுவகைமிச் சிரமம்
ஆகுமதில் ஆசார லிங்கமதிற் கடின
பரிசமறி குருலிங்க மிருதுவா மதனைப்
பரிந்தறியும் சிவலிங்கம் வெம்மைதனைப் பண்பாற்
கருதறியுஞ் சங்கமலிங் கஞ்சயித் தியமே
காணுமிகுந் தினவதனைக் கருதியென்றும்
பெரிதறியும் பிரசாத லிங்கமிவ் வைந்தின்
பெறுபரிச திருத்தியெலாம் அறித்திடு மாலிங்கம்.''

என்பது விளக்கும்.

(மிசிர-ச. செய்.12)

## 5. ஒளி

24. கஞ்ச நரம்புதோல் கண்டகுழ லாதியொலி
அஞ்சொல் இவையெல்லாம் அவ்வாறுமுறும் என்றானோ.

பொருள் .

கஞ்சம் (ஒலி) (காதிலிருந்து பிரசாதலிங்கம் ஒலியை அறியும் போது) வெண்கலத்திலிருந்து உண்டாகும் ஒலி, நரம்பு (ஒலி)

நரம்புக் கருவியிலிருந்து உண்டாகும் ஒலி, தோல் (ஒலி)-தோற் கருவியிலிருந்து உண்டாகும் ஒலி, கண்ட குழலாதி ஒலி-கண்டத்திலிருந்து உண்டாகும் புல்லாங் குழல் முதலியவற்றின் ஒலி, அஞ்சொல்-கீதமொழி (ஆகிய ஐந்தும்), இவையெல்லாம் இவ் ஐந்தின் கலப்பும் (பரிணாமம்) ஆகிய இவற்றை, அவ் வாறும் உறும் என்றானோ-அவ் ஆறு இலிங்கங்களும் அர்ப் பிதப் பொருளாக முறையே கொள்ளும் என்றருளியவனோ.

விளக்கம் :

ஒலி என்பது ஏனைய இடத்துங் கூட்டப்பட்டது.

## 5. பிரசாத லிங்க மிசிரம் ஆறு

1. பிரசாத லிங்கத்தில் ஆசாரலிங்கத்திற்கு கஞ்சஒலி அர்ப்பிதமாம். கைம்மணி, கைத்தாளம் முதலியன.
2. ,, ,, குருலிங்கத்திற்கு நரம்பொலி அர்ப்பித மாம். யாழ், வீணை முதலியன.
3. ,, ,, சிவலிங்கத்திற்குத் தோற் கருவியொலி அர்ப்பிதமாம். மத்தளம், பேரிகை முதலியன.
4. ,, ,, சங்கமலிங்கத்திற்குக் குழலோசைப் அர்ப் பிதமாம். புல்லாங்குழல், நாதசுரம் முதலியன.
5. ,, ,, பிரசாத லிங்கத்திற்குக் கீதமொழி அர்ப்பிதமாம்.
6. ,, ,, மகாலிங்கத்திற்கு எல்லா ஒலியும் அர்ப் பிதமாம்.

"பிரசாத லிங்கத்தின் அறுவகை மிச்சிரமம்
பேசில் ஆசாரலிங்கம் கைம்மணி கைத்தாளம்





உறுமோசை தனையறியும், குருலிங்கம் கம்பி

யுற்றோசை தனையறியும், கோலாடித்த சத்தத்

திறமறியுஞ் சிவலிங்கம், நாதசுரம் சங்கு

திகழ்குழலின் ஓசையறி யுஞ்சங்கம லிங்கந்தான்,

பெறுராக கீதமொழி பிரசாதம் அறியும்

பெற்றியைந்தின் பரிணாமம் அறிந்திடுமா லிங்கம்."

என்பது விளக்கும்.

(மிசிர-ச.செய்.12)

## 6. நிறைவு

25. மணமுதலாம் ஐந்து வகைநிறைவு எலாமும்

நணுமுறை ஆசாராதி நாடிலெனச் சொன்னானோ.

பொருள்

நாடில்-ஆராயுங்கால், மண முதலாம் ஐந்து வகை நிறைவு-(மனத்தில் மகாலிங்கமிருந்து அறியும் போது) மணநிறைவு முதலாகிய ஐவகை நிறைவும் (திருப்தியும்), எலாமும் - எல்லா வகையிலும் வரும் திருப்தியும், முறை-முறையே, ஆசாராதி நணும் எனச்சொனானோ-ஆசாரலிங்க முதலிய இலிங்கங்களை அடையும் என்றருளியவனோ.

விளக்கம்

நணும்-நண்ணும் என்பதன் தொகுத்தல் விகாரம். நிறைவு-நிறைவும். உம்மை தொக்கது. இது மகாலிங்க மிசிரம் ஆறினுக்கும் அறுவகைத்தாம் திருப்தி அர்ப்பணம் ஆமாறு உணர்த்தியதாம்.

## 6. மகாலிங்க மிசிரம் ஆறு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. மகாலிங்கத்தில் | | ஆசாரலிங்கத்திற்கு | திருப்தி மணத்தின் | அர்ப்பிதமாம். | |
| 2. ,, | ,, | குருலிங்கத்திற்கு | சுவையின் | ,, | ,, |
| 3. ,, | ,, | சிவ ,, | உருவ | ,, | ,, |
| 4. ,, | ,, | சங்கம ,, | பரிச | ,, | ,, |
| 5. ,, | ,, | பிரசாத ,, | ஒலி | ,, | ,, |
| 6 ,,. | ,, | மகாலிங்கத்திற்கு ஐந்து வகைத் திருப்தியும் ,, | | | |

"மாலிங்க மிச்சிரமம் அறுவகையா சார
மன்னியறிந் திடுகெந்த திருத்தி தன்னை,
தாலிலுறு குருலிங்கம் இதர திருத்தி
தனையறியுஞ், சிவலிங்கம் உருவ திருத்தி,
ஏலவரி பரிசதிருத்தி சங்கமலிங்கத்தே,
யிசைந்தறியுஞ், சத்ததிருத்தி பிரசா தந்தான்
கோலியிவை யைந்தினுள் திருத்தி யெல்லாங்
கொண்டறியு மாலிங்கங் குலவி நின்றே"

(மிசிர-ச-செய் 13)

என்பது விளக்கும்,

26. இவ்முறையா னாலும் இலங்குகர ணார்ப்பிதா மென் (று)
எம்மறிவு கொள்ள இயம்புசிவ ஞானியோ.

பொருள் :

இலங்கு கரணார்ப்பிதம்-விளங்காநின்ற கரணார்ப்பிதமாகிய இம்முறை-இவ்வகையில், ஆறு ஆறாம் என்று-முப்பத்தாறு இலிங்கங்களாகுமென்று, எம் அறிவு கொள்ள இயம்பு சிவ ஞானியோ - அடியேங்களது அறிவில் ஏற்றுக் கொள்ளுமாறு அறிவித்த சிவஞானியோ,

விளக்கம்:

## முப்பத்தாறு இலிங்கங்களானவை.

1. ஆசார லிங்க மிசிரம் ஆறு
2. குருலிங்க மிசிரம் ஆறு
3. சிவலிங்க மிசிரம் ஆறு
4. சங்கமலிங்க மிசிரம் ஆறு
5. பிரசாத லிங்க மிசிரம் ஆறு
6. மகாலிங்க மிசிரம் ஆறு

இதனால் அர்ப்பிதவகை மூன்றனுள் ஒன்றாகிய கரணார்ப்பித முறையால் ஏகலிங்கம் முப்பத்தாறு இலிங்கங்களாயினவாறு உணர்த்தப்பெற்றது.

## மிசிரார்ப்பணத்தில் மிசிரம்

இது **பாவார்ப்பிதம்** என்றும் சொல்லப் பெறும்

"இப்படி முப்பதாறு மிச்சிரமம் இதனுள்,
இசையுமிச் சிரம்பா வார்ப்பிதந் தானாகும்."

என்பது மிசிர சடுத்தலம். (செய்.14)

கரணார்ப்பிதம் செய்த சிவயோகி இலிங்கத்திற்கு மனோ விகாரங்களான பாவங்களை அர்ப்பணஞ் செய்தல் பாவார்ப்பிதமாம்,

27. தொட்டறிந்திங் கொன்றைத் துணிந்து நுகர்ந்துமகிழ்ந்
திட்டமைந்து நிற்கும் இலிங்கங்கள் என்றானோ.

பொருள் :

இங்கு-பொருள்களை அர்ப்பணஞ்செய்யும் இந் நிலையில், இலிங்கங்கள்-ஆசாரலிங்க முதலிய இலிங்கங்கள், (முறையே)

ஒன்றை-ஒரு புலனில் யாதாமொரு பொருளுறின் அதனை, தொட்டு-பற்றி, அறிந்து-அதன்பின் உறத்தொட்டு இதுவென் றறிந்து, துணிந்து-அறிந்ததை ஐயமற நிச்சயஞ்செய்து, நுகர்ந்து-அதனை அநுபவித்து, மகிழ்ந்திட்டு-அதனாலுறும் மகிழ்ச்சியையடைந்து, அமைந்துநிற்கும்-இங்ஙனம் ஐவகையில் வந்ததைக் கொண்டு திருப்தியடைந்திருக்கும், என்றானோ-என்றருளியவனோ.

விளக்கம் :

இதில் தொடுதல்-அறிதல்-துணிதல்-நுகர்தல்-மகிழ்ந்திடல் -அமைதல் ஆகிய ஆறு செயல்கள் உள்ளன. இவை முறையே ஆசாரலிங்க முதலியவைகளுக்குரியனவாம்.

''இப்படிமுப் பத்தாறு மிச்சிரமம் இதனுள்

இசையுமிச் சிரமம்பாவார்ப் பிதந்தானாகும்,

செப்பிய யாதொரு பொறியில் விடயந்தன்னைச்

சேர்ந்தறியும் வேலையா சாரலிங்கம்,

அப்படியே யுற்றுணர்தல் குருலிங்கம், என்றே

அறிந்ததனை நிச்சயித்தல் சிவலிங்கம்,

தெளிந்தே

துப்புமது சரலிங்கம், திருத்தி பிரசாதம்,

தூயபரி ணாமமெல்லாம் அறிதல் மகாலிங்கம்.

என்பது விளக்கும். (மிசிர-ச-செய்.14)

தொடுதல் என்பது ஒன்றைப் பற்றுதல். ஆதலின், அது மனத்தின் செயலாகவும், அறிதல் ஒன்றை இன்னதென்று அறிதலாதலின் அது புத்தியின் செயலாகவும். துணிதல் ஒன்றை நிச்சயித்தலாதலின் அது சித்தத்தின் செயலாகவும், நுகர்தல் மேற்கொண்டெழுந்து அநுபவித்தலாதலின் அஃது அகங்காரத் தின் செயலாகவும், மகிழ்ந்திடல் ஞானத்தின் செயலாகவும்

உள்ளன. ஆகவே அகக் கருவிகளாகவுள்ள இவற்றால் அநுபவிக்கின்றவற்றை இறைவனுக்கு அர்ப்பித்தலான் பாவார்ப்பிதமென்னப்பட்டது.

28. கூறுமிவை யாவினுமிக் கொள்கை பெறுமிலிங்கம்
ஏறும் இரட்டுநூற் றெட்டாகும் என்றானோ.

பொருள் ;

கூறும்-சொல்லப்பெறும், இவையாவினும்-மிசிரார்ப்பணத்தில் மிசிரமாகக் கொண்ட இவையாவற்றானும், இக்கொள்கை பெறும் இலிங்கம்-அர்ப்பிதங் கொள்ளும் இலிங்கங்கள், ஏறும் இரட்டு நூற்றெட்டாகும் என்றானோ-மிகுதியாக இருநூற்றுப் பதினாறாகும் என்றருளியவ்னோ.

விளக்கம் :

மிசிரார்ப்பணக் கிரியை வகையில் பெறப்பட்ட இலிங்கங்கள் முப்பத்தாறு, இதில் மிசிரத்தில் மிசிரமாக ஒன்று அறு வகைப்படும்போது இருநூற்றுப் பதினாறு இலிங்கபேதங்களாம்.

''இவ்வகையே யாறிலிங்க முப்பத் தாறி
லிங்கமாய் இருநூற்றோ டொருபத் தாறும்
செவ்வியநல் லிங்கமாய் அண்ட பிண்டஞ்
சேர்ந்துபரி பூரணமாய்ச் சிறந்து நிற்கும்''

என்னும் மிசிர சடுத்தலம்.

(செய்.15)

கிரியா பேதத்தால் அனேகமாக இலிங்கங்கள் எண்ணிக்கை பெறினும் ஆசாராதி ஆறு இலிங்கங்களே திரும்பத் திரும்ப வருகின்றனவேயன்றி வேறில்லை. ஆதலின், யாவும் ஆறு இலிங்கங்களிலடங்கும். ஆறு இலிங்கங்களும் மூன்று இலிங்கப்

களிலடங்கும். மூன்று இலிங்கங்களும் ஒன்றாய்ப் பரசிவத் தலமாம் என்ற உண்மையை உளத்துக் கொள்ளல் வேண்டும்.

இதுகாறும் கூறப்பெற்ற அர்ப்பித முறைகளை நோக்கு வோர்க்கு இவ்வாறு இறைவனுக்கு அர்ப்பித்தல் இயல் வதாமோ என்ற எண்ணம் உண்டாதல் இயல்பு. மகாலிங்கத் திற்கு அர்ப்பிக்கப்படுவனயாவும் எல்லா இலிங்கங்களுக்கும் அர்ப்பிதமாகிவிடும். அன்றியும், இது சிவயோகிகள் கொண்ட நெறியெனவுங் கொள்க.

## மூவகை அர்ப்பிதம்

29. உருவம் சுவைநிறைவாய் ஓங்கர்ப் பிதங்கள்
மருவுந் திறஞ்சொல் மயிலை மலைவிளக்கோ.

பொருள் :

ஓங்கு அர்ப்பிதங்கள்-சிறப்புமிக்க நிவேதனங்கள், உருவம் சுவை நிறைவாய்-இஷ்டலிங்கத்திற்கு உருவமும் பிராண லிங்கத்திற்குச் சுவையும் பாவலிங்கத்திற்கு நிறைவுமாய், மருவும் திறஞ்சொல் மயிலை மலை விளக்கோ-அர்ப்பிதமாகும் வகையினை இயம்புகின்ற மயிலை மலைமேல் விளங்குகின்ற ஞான தீபமோ.

விளக்கம் :

இஃது ஒரு பொருளிலுள்ள மூவகைப்பொருள் அர்ப்பிதம் ஆமாறு உணர்த்துவதாம்.

இலிங்கார்ப்பணம் கிரியார்ப்பணமென்றும் ஞானார்ப்பண மென்றும் இருவகைப்படும். கிரியார்ப்பணமாவது தன் உப யோகத்திற்குக் கிடைக்கின்ற பொருளை மூன்று இலிங்கங்களுக் கும் அர்ப்பித்து அப்பிரசாதத்தை அநுபவிப்பதாம்.

அர்ப்பிதம்-தூலாப் பொருள் அர்ப்பிதம், சூ[illegible] அர்ப்பிதம், ஆனந்தப் பொருள் அர்ப்பிதமெ்ன மூவகைப்படும். ஒரு பொருளின் உருவமே தூலப்பொருள், அதன் சுவையே சூக்குமப்பொருள், அதனை அநுபவித்தலாலுண்டாகும் திருப்தியே (நிறைவு) ஆனந்தப் பொருளாம்.

தூலப் பொருளான உருவம் இஷ்டலிங்கத்திற்கு அர்ப்பிதமாம். அவ்வாறு செய்பவன் விசுவன். சூக்குமப் பொருளான சுவை பிராணலிங்கத்திற்கு அர்ப்பிதமாம். அவ்வாறு செய்பவன் தைசதன். ஆனந்தப் பொருளான திருப்தி பாவலிங்கத்திற்கு அர்ப்பிதமாம். அவ்வாறு செய்பவன் பிராக்ஞன். இங்ஙனம் உரு-சுவை-நிறைவு ஆகியவற்றை இறைவனுக்கு அர்ப்பித்துச் சிவப்பிரசாதமாக கொண்டு நான் புசிக்கிறேனென்னுந் தன்மை தோன்றாமல் இருப்பவன் சடுத்தல ஞானியாவன்.

"ஒன்றொரு விடயந் தன்னில்
உருசுவை நிறைவென் றாக்கி
என்றுமெம் முகத்த ளித்திட்(டு)
எம்பிர சாதங் கொண்டு
துன்றுறு கரும்ம் உன்னாத்
தூய்மை யிவ்வீர சைவத் (து)
அன்றிவே றொருமார்க் கத்தின்
அடுக்குமோர் வடுக்கண் மாதே."

(பிரபு-மான்-செய் 14)

(விடயம்-பொருள், மார்க்கம்-சமயம்.)
என்று கூறும் நுட்பம் சடுத்தல ஞானிகளே அறிவர்.

## மூவகைப் பிரசாதம்

30. சுத்த சித்த மோடுபிர சித்தமெனத் தோன்றுபுபா
சத்தமுத்த மாக்குபிர சாதம் அருள் நாயகனோ.

பொருள் :

சுத்த சித்தபோடு-சுத்தம் ... ரசித்தம் எனத் தோன்றுபு-பிரசித்தம் என ஆகி, பாசத்த முத்தம் ஆக்கு பிரசாதம் அருள் நாயகனோ-பாசமானவற்றை நீக்குகின்ற பிரசாதம் இவையென்று உபதேசிக்கின்ற ஞான நாயகனோ.

விளக்கம் :

இது மூவகைத்தாம் பிரசாதம் இவையென்று உணர்த்துவதாம். இவற்றின் விளக்கம் கீழ் வருவனவற்றால் காண்க.

''இனியசிவப் பிரசாதம் என்னல் தானே
இலங்குசிவப் பிரசன்னம், இதுவே சுத்தம்
நனிதிகழுஞ் சித்தம், பிர சித்தம் என்ன
நண்ணியொரு மூவிதமாம் நவிலுங் காலை,
உனவரிய தீக்கைபுரி குருமுன் னாக
உறு குரவா மூவருமொன றெனவே நாடிப்
பினையவர்கள் முகத்தில்நிர கம்பா வத்தால்
பெறுவன் முன் சொன்னபிர சாதமாமே-''
(வீ-த-பி. செய் 399)

(பிரசன்னம்- அருள் வெளிப்படுதல்
பிரசாதம்-அருள்)

''சுத்தமெனல் என்னென்னின் முன்னுளகா மாதிகன்மந் தொடர்குணங்கள்
வர்த்தனையா ணையின் அகற்றி வித்தைவகள் இலிங்கமுக மாகும் என்று
புத்தியுறத் தெளித்தலின் ஆரியன் முகத்தில் விளங்குதற்குப் புகல்வர் அப்பேர்,
சத்தியமா மூவிலிங்கம் அறிந்தவற்றால் வந்தபிர சன்னம் சித்தம்,''
( வீ த.பி. செய் 400 )

''உயர்**சித்தம்** என்றுரைத்தல் என்னெனின் மூவிலிங்
கத்தின் உறுஞா னத்தால்
செயிரற்ற இலிங்கமொடு சரமதிகம் எனுஞானஞ்
சித்தித் தோங்கும்
இயலில்தற் பரலிங்கம் பிரசன்னஞ் சித்தமென
இயம்பல் வைகும்
அயர்வற்ற சரமூன்றும் தந்துகொளல் **பிரசித்தம்**
ஆகும் அன்றே.
(வீ.த பி.செ.140)

''பிரசித்தம் எனல்சகல இந்தியத்தைப் பாசத்தைப்
பெரிதும் நீக்கி
யரிதுற்ற சிவன்றானென் சிவபாவம் பிரசித்தம்
ஆகை யாலே
சரமுற்ற பிரசன்னம் **பிரசித்தம்** எனும்பெயரில்
சாரும் கண்டாய்
வரமுற்ற பிரசாதத் தாற்பத்தி பதமுண்டாம்
வகுத்துங் கேட்டி''
(வீ.த.பி.செ.402)

## இத்திருப் பாடல்களுக்குரிய பழையவுரை.

''சிவப்பிரசாதமென்பது சிவப்பிரசன்னத்துவம். அந்தச் சிவப் பிரசன்னத்துவமே சுத்தப் பிரசாதம்-சித்தப் பிரசாதம் பிரசித்தப் பிரசாதம் என்று மூன்று விதமாயிருக்கும். எப்படியெனில், சிக்ஷா குரு-தீக்ஷா குரு-ஞான குரு என்னும் மூவரும் ஒன்றேயென்று அபேதமாய் அறிந்து அவர்கள் முகத்தில் நிரகம் பூரண பத்தியினாலே கிரகிக்கப்பட்ட பிரசன்னமே **சுத்தப் பிரசாதம்.**

இதற்குச் சுத்தப் பிரசாதம் என்பானேனென்னில் முன்னுள்ள காமாதி சகல கன்ம குணங்களின் வாதனையைச் சிக்ஷையினாலே நிவிர்த்திபண்ணி அவைகளெல்லாம் இலிங்க முகமாயிருக்குமென்று அனுக்கிரகம் பண்ணுகையினாலே குரு முகப் பிரசன்னத்துக்குச் **சுத்தப் பிரசாதம்** என்று சொல்லப்பட்டது. (செய்.399.உரை)

இஷ்ட-பிராண-பாவமென்னும் இலிங்கத் திரயங்களை யறிந்து நிரகம்பாவ பத்தியினால் கிரகிக்கப்பட்ட பிரசன்னமே **சித்தப் பிரசாதம்.** (செய்,400.உரை)

இதற்குச் சித்தப் பிரசாதம் என்பானேனென்னில், இலிங்கப் பிரசன்னத்திலுண்டாக்கப்பட்ட சிவஞானத்தினால் இலிங்கமும் சங்கமும் அதிகமென்றறியும் ஞானம் சித்திக்கையினால் தற்பரலிங்க முகப் பிரசன்னத்துக்குச் **சித்தப் பிரசாதம்** என்று சொல்லப்பட்டது.

சுய-சர-பரம் என்னும் சரலிங்கத் திரயத்தை ஒன்றென்றறிந்து நிரகப்பாவ பத்தியினால் கிரகிக்கப்பட்ட பிரசன்னமே **பிரசித்தப் பிரசாதம்.** (செய்.401,உரை)

இதற்கு பிரசித்தப் பிரசாதம் என்பானேனென்னில், சகல இந்திரியங்களையும் நீக்கிப் பரசிவம் தானென்றும் சிவபாவம் பிரசித்தமாகையினால் சங்கம முகப் பிரசன்னத்துக்குப் பிரசித்தப் பிரசாதம் என்னப்பட்டது. இந்தப் பிரசாதத்தினால் பத்தி பதம் உண்டாம்." (செய்.402,உரை)

## சரலிங்கத் திரயம் விளக்கம்

1. **சுய லிங்க சிவயோகி** காணப்படுகின்ற உலகமெல்லாம் சிவ ரூபமெனக் கண்ட முனிவன். சோதிலிங்கத்திலேயே மனத்தைச் செலுத்தியவன். தன் இச்சையின்படி ஒழுகுபவன், அகங்காரமற்றவன். இந்திரியங்களை அடக்கிய

வன் விசனமற்றவன். விருப்பு வெறுப்பற்றவன். சிவத்தியானம்-சிவ ஞானம்-பிச்சையெடுத்துண்ணல்-தனியே வசித்தில்ஆகிய இந்நான்கினையுமன்றி எச்செயலுமில்லாத பரம யோகியே சுயலிங்க யோகியாவன்.

**உ. சரலிங்க சிவயோகி** மேற்கூறிய சுயலிங்க சிவயோகியே அகங்கார மமகாரங்கள் அற்றவனாய் ஞானவடிவமாய்ச் சிவ பமாகவும் உலகில் சஞ்சரிப்பவன் ஆகலின் சரலிங்க சிவயோகியாவன்.

**ஙூ. பரலிங்க சிவயோகி** சரலிங்க சிவ யோகியே தான் தானாகவேயிருந்து சஞ்சரிக்கின்றவனாகிய சிவ யோகி. தன் சொரூபத்தைக் காட்டிலும் வேறு பொருளில்லையென்னும் பரஞான முடையவன் ஆகலின் பரலிங்க சிவயோகியாவன்.

## அட்ட சகிலம்

**31. அங்கலிங்க சத்திபத்தி அத்தமுக அர்ப்பிததேச**
**டங்களிவை அட்ட சகிலமெனச் சொன்னானோ.**

பொருள் :

அங்கலிங்க-அங்கமும் இலிங்கமும், சத்தி பத்தி-சத்தியும் பத்தியும், அத்த முக அர்ப்பித சேடங்கள் இவை அட்ட சகில மெனச் சொன்னானோ-ஆறு அத்தங்களும் ஆறு முகங்களும் ஆறு அர்ப்பிதப் பொருள்களும், ஆறு பிரசாதங்களும் ஆகிய இவை அட்ட சகிலமெனச் சொன்னானோ.

விளக்கம் :

1. அங்கம்—பத்தன் முதலியன.
2. இலிங்கம்—ஆசாரலிங்கம முதலியன.

இவை இரண்டும் பரசிவத்தின் சிறப்பு இலக்கணமாகிய சத்து சித்து ஆனந்தம் என்னு மூன்றனுள் சத்தின் அம்சம் என்பர்.

1. சத்தி—கிரியா சத்தி முதலியன.

2. பத்தி—சற்பத்தி - நயிட்டாபத்தி—அவதான பத்தி—

அநுபவ பத்தி-ஆனந்த பத்தி-சமரசபத்தி ஆகியவை. இவை இரண்டும் சித்தின் அம்சம் என்பர்.

1. அத்தம் :—சுசித்த அத்தம் முதலிய ஆறு அத்தங்கள். (32-36. கண்ணிகளில் கூறப்பெறும்)

2. முகம்:—சத்தியோஜாதம் ' வாம தேவம்—அகோரம்—தற்புருடம்—ஈசானம்—அதோமுகம் ஆகியவை.

3. அர்ப்பிதம் : - மணம்—இரசம்—உருவம் – பரிசம் – ஒலி இவற்றின் பரிணாமம் ஆகியவை.

4. சேடம்: —மணப் பிரசாதம்- இரசப் பிரசாதம்—உருவப் பிரசாதம்—பரிசப் பிரசாதம்—ஒலிப் பிரசாதம்—இவற்றின் பரிணாமப் பிரசாதம்.

இவை நான்கும் ஆனந்தத்தின் அம்சம் என்பர்

"சத்து அங்க லிங்கங்க ளாயே நிகழ்ந்தது, சத்திபத்தி
சித்துஇங் கடைந்தது, கைம்முக அர்ப்பித சேடங்களாய்
மெத்தன் றிலங்குநின் ஆனந்தமே என் விழிகளிப்பக்
கைத்தங்கு செம்பொருளே யருள்காட்டுங் கறைக்கண்டனே."

என்பது காண்க. (நிர மா-செய் 9)

**சகிலம்**

"அங்க லிங்கத்தின் கூடுதல், பிரிதல்,
பற்றுதலைச் சகிலமென்றது."

என்று அக்கமாதேவி சிருட்டி என்ற ஏட்டில் பொருள் கூறப் பட்டுள்ளது.

"அர்ப்பிதங்களை யேற்கும் இலிங்கமும் அதன் சத்தியும் ஏற்கு முகமும் அர்ப்பிக்கும் ஆன்மாவும் அதன்பத்தியும் அர்ப்பிக்

கும் அஸ்தமும் அர்ப்பிக்கும் பொருளும் அர்ப்பித சேஷமுமாகிய அஷ்ட சகிலமாய் ஒரு வத்துவே ஆர்த்திடுமென்றது சித்தும் அசித்துமாகிய பிரபஞ்சங்களனைத்தும் சிவ சொருபமென்னும் வேதாகமத் துணிபு பற்றியென்க.''

வீர.பு.சிதம்பரம் ஈசானிய மடம்,
இராமலிங்க சுவாமிகள் குறிப்புரை. பக் 38)

''அட்ட சயிலம்'' — பிரதி பேதம்.

## ஆறு தலங்கள்.

32. குசித்தம் அழிந்து குடும்பநோய் மாற்றுஞ்
சுசித்த மதில் ஆசாரந் தோன்றுமெனச்
சொன்னானோ.

பொருள் ;

குசித்தம் அழிந்து-குற்றம் பொருந்திய சித்தத்தின் செயல் கெட்டு, குடும்பநோய் மாற்றும்-மனைவி, மக்கள், தாய் தந்தை ஆகியவராலும் பொன், மண் ஆகியவற்றாலும் உண்டாகும் துன்பத்தைப் போக்கிய, சுசித்தமதில் ஆசாரம் தோன்றுமெனச் சொன்னானோ-சுசித்தமாகிய அத்தத்தில் ஆசாரலிங்கம் எழுந்தருளுமென்று உரைத்தவனோ.

விளக்கம் ;

அத்தம்-அஸ்தம், கை. கு-என்பது குற்றம், சிறுமை என்னும் பொருள்படும் ஓரிடைச்சொல். குசித்தம் × சுசித்தம்.

''இல்லாள் புதல்வர் அனைதந்தை பொன்மண் ணிடை விழைவு
செல்லா மருளு மயல்தீர்ந்து நின்கழல் சேர்ந்துனக்கே.
எல்லாம் உதவுநற் சித்தத்து உறைகுவை என் கையுள்ளாய்
நல்லார் புகழ்தரும் ஆசார லிங்கமென் நாமமுற்றே.''

(நிர-மா.செ 21)

(அனை-அன்னை. செல்லா-சென்று. மருளும்-மயங்கும்)
என்பது விளக்கிக் கூறும்.

33 குபுத்தி அழிந்து குருநெறியில் நிற்குஞ்
சுபுத்திதனில் நிற்குஞ் சுடர் குரு இங்கென்றானோ.

பொருள் :

குபுத்தி அழிந்து சிறுமை பயக்கும் புத்தியின்றி, குரு நெறியில் நிற்கும் சுபுத்திதனில்-குருவானவர் கற்பித்த நன்னெறியில் நிலைத்திருக்கும் சுபுத்தியாகிய அத்தத்தில், சுடர்குரு நிற்கும் இங்கு என்றானோ-விளங்கா நின்ற குருலிங்கம் நிலைபெற்றிருக்குமென்றருளியவனோ.

விளக்கம் ;

''பழியாம் பிறர்தம் பொருள், மனை வேட்கை, பரதெய்வமோ(டு)
ஒழியா அருள்தரும் அட்டாரவரணம் உவந்துகொண்டே
அழியா துயருறுஞ் புத்தியெனுங்கை யமர்வைகண்டாய்
மொழியா வருங் குரு லிங்கமென் றேயென்
கைமுன்னவனே.
(நிர-மா-செ 2 )

(ஒழியா - ஒழித்து. யாவரும் மொழி - யாவரும் சிறப்பித்துக் கூறுகின்ற)

என்பது விளக்கிக் கூறும்.

34 ஆங்காரம் இல்லா நிராங்கார அத்தமதில்
நீங்காது இலகும் நிகழ்த்துசிவம் என்றானோ.

பொருள் ;

ஆங்காரம் இல்லா-அகங்காரம் இல்லாத, நிராங்கார அத்த மதில்-நிராங்காரமென்னும் அத்தத்தில், நிகழ்த்து சிவம் நீங் காது இலகும் என்றானோ-யாவற்றையும் இயக்கா நின்ற சிவலிங்கம் நீங்காமல் விளங்குமென்றருளியவனோ.

விளக்கம் ;

ஆங்காரம்-அகங்காரம். அகங்காரம் என்பதில் ககர உயிர் மெய் கெட்டு முதல் நீண்டு ஆங்காரம் என்றாயிற்று. நிராங் காரமென்பதே ஆங்காரமின்மை யென்னும் பொருளை யுணர்த்தாநிற்க "ஆங்காரமில்லா" என்றுரைத்திருத்தல் சொற் பொருள் விளங்கவைத்தலாம். அகங்காரம்-யான் எனது என்னும் அபிமானம், செருக்கு.

"விடயங்களில் நண்ணி யானென தென்னு மிகையொருவி,
யடையும் புலன்நினக் காக்குந் நிராங்காரப்
பெயர்
உடையங் கரமிசை நற்சிவலிங்கமென்
றுற்றனைகாண்
புடையம் பிகையோ டமர்வாய் என்கைப் புராந்தகனே."

(நிர-மா-செய் 23)

(தவிர் அகங்காரம்-நிராங்காரம். விடயம்-புலன்கள். மிகை ஒருவி-குற்றத்தை நீக்கி. அம்பிகை-உமை.) என்பது விளக்கிக் கூறும்.

## 35. கமனம் அழிந்து கறையற்று நிற்கும் சுமனமதில் நின்றிலகும் தூயசரம் என்றானோ.

பொருள் :

கமனம் அழிந்து- புறவிடயங்களிற் செல்லுதலொழிந்து, கறை அற்று நிற்கும்—மாசற்று இருக்கும், சுமனமதில் தூய

சரம் நின்றிலகும் என்றானோ—நன்மனமாகிய அத்தத்தில் பரிசுத்தமான சங்கமலிங்கம் இருந்து விளங்குமென்ருளியவனோ.

விளக்கம் :

கறை-மாசு, குற்றம். கறையற்ற மனம் சுமனம் எனப் பட்டது. கமனம்—போதல். சரம்—சங்கமலிங்கம்
''விரிந்த நெஞ்சம் கருவியாம் விடயம் உணர''
(பிரபு-மனோ-செய்.11)
என்பதறிக.

''நில்லா தியங்கும் வளியோடு கூடி நிலையழிந்தே
புல்லா விடயத் தலமரல் நீங்குபு பொய்யில்நெறி
செல்லா தொளிர்நுண் மனத்தே யிருத்தியென் செங்கை
யுள்ளாய்
கல்லார் அறிவருஞ் சங்கம நிர்மம் கடைப் பிடித்தே.''
(நிர.மா.செய்.24)

(வளி-பிராணவாயு. அலமரல்-சுழலல். விடயத்துப் புல்லா-விடங்களில் புல்லி. விடயம்-புலன்கள். நீங்குபு-நீங்கி, செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்)
என்பது விளக்கிக் கூறும்.

36. மெய்ஞ்ஞான மாகி மிளிரும் *பிரசாதஞ்*
*சுஞ்ஞான அத்த*மதில் தோன்றுமெனச்
சொன்னானோ.

பொருள் :

மெய்ஞ்ஞான மாகி-மெய்யறிவின் வடிவமாகி, மிளிரும் பிரசாதம்-விளங்காநின்ற பிரசாத லிங்கம், சுஞ்ஞான அத்தமதில் தோன்றும் எனச் சொன்னானோ-தூய ஞானமாகிய அத்தத்தில் எழுந்தருளுமென்றுரைத்தவனோ.

விளக்கம் :

இறைவன் ஞானவடிவினன் (வாலறிவன்) ஆதலின் "மெய்ஞ்ஞானமாகி மிளிரும் பிரசாதம்" என்றார். "மெய்ஞ் ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே" (சிவபுராணம்.)என்னும் திருவாசகம்.

'உடம்பு சதி. பதி தானாய் விடயங்க ளுண்டுலவா (து)
அடங்கு சதியொரு தானாகி நீபதி யாகவுனைத்
தொடர்ந்து நுகருநன் ஞானக் கரத்திடைத் தோன்று வைமால்
கடந்துவரு பிரசாத மென்றே யென்கைக் கண்ணுதலே,"
(நிர-மா-செய்.25)

(உடம்பு சதிபதி தானாய்-உடம்பு நாயகியாகவும் நாயகன் தானாகவும். சதியொரு தானாகி நீ பதியாகி-நாயகி ஒப்பற்ற ஆன்மாவாகி இறைவனாகிய நீ நாயகனாக.) ஞானக்கரம்-சுஞ்ஞான அத்தம்,
என்பது விளக்கிக் கூறும்.

37 துற்பாவ நீங்கித் துணிவுபடும் அத்துவித
சற்பாவ மாலிங்கம் சாருமெனச் சொன்னானோ.

பொருள் :

துணிவுபடும் துற்பாவம் நீங்கி-நீ நான் என்று பகுத்துணரும் துற்பாவம் நீங்கப் பெற்று, அத்துவித சற்பாவம்-இரண்டற்ற இயல்பினதாகிய சற்பாவமென்னும் அத்தத்தில், மாலிங்கம் சாரும் எனச் சொன்னானோ-மகாலிங்கம் எழுந்தருமென்று உரைத்தவனோ.

விளக்கம் :

துற்பாவம் X சற்பாவம். பாவம்-எண்ணம், கருத்து.
''யானா ரடிமை சிவனே இறையென் றிருப்பதுபோய்
நீ நான் எனப்படும் பேத மிலாமை நெறியுதவும்
ஆனா துயர்ந்தசற் பாவத்து மாலிங்க மாகி
நின்றாய்
வானா டரியவ னேகர பீடத்து மாணிக்கமே.''
(நிர-மா.செய் 26)

(யான் ஆர் அடிமை-யான் அரிய அடிமை. சிவனே இறை-சிவ பெருமானே ஆண்டான். பேதமிலாமை நெறி - அத்துவித மார்க்கம்) என்பது விளக்கிக் கூறும்.

இங்குக் கூறியுள்ள அத்தங்கள் (கரங்கள்) ஆறு. அவை: சுசித்தம் - சுபுத்தி- நிராங்காரம்-சுமனம்-சுஞ்ஞானம்-சற்பாவம். இவை அகக் கருவிகளாகவுள்ளவை, புறவழிபாட்டில் (கிரியா மார்க்கத்தில்)இறைவன் கரத்தில் எழுந்தருள்வது போல அகவழி பாட்டில் (ஞான மார்க்கத்தில்) இவ்வத்தங்களில் எழுந்தருள் புரிவன், இவ்வத்தங்கள் சிவாத்துவித பத்தியால் உண்டாம்.

''எல்லா வேதாகமங்களும் கொண்டாடத்தக்க பரதத்துவம் யாதோ அது வஸ்து என்று கூறப்படும். அந்த வஸ்து வினாலே பாவம் பிறந்தது பாவத்தினாலே ஞானம் பிறந்தது. ஞானத்தினாலே மனது பிறந்தது. மனத்தினாலே அகங்காரம் பிறந்தது. அகங்காரத்தினாலே புத்தி பிறந்தது. புத்தியினாலே சித்தம் பிறந்தது. அஃதெவ்விதமெனில், வேதாகமம் ஒரு பொருளுண்டென்கிறதே வஸ்து பாவம். வஸ்துவை தேர்ந்தறி கின்றதே ஞானம். வஸ்துவை நினைக்கின்றதே மனது. வஸ்துவை உண்டென்கிறதே அகங்காரம். வஸ்துவை நிச்சயிக்கிறதே புத்தி. வஸ்துவை நிறுத்திக் கொள்கிறதே சித்தம். இப்படி அந்தக் கரணங்கள் வஸ்துவினால் பிறந்தன''
(வீரசைப் பிரமாணம்)

பத்தன் முதலிய அறுவருக்கும் சுசித்தம் முதலிய ஆறு அத்தங்களும் முறையே உரியவென அறிக.

**''பத்தியதிற் றேற்றம் பகரின் அத்தம்**
ஆறாகும்
மற்றதன் நாமம்சுத்த நற்சுபுத்தி — மற்று
நிரகங்கா ரம் சுமன நீள் ஞானம் பாவம்
வருமப் பெயரரம் வளம்.

(அ. வெ. உண்மை செய்)

,,மாயா பதார்த்தங்களைச் சிந்தியாமல் சிவனையே சிந்திக்கையால் **சிசுத்தம்** என்றும், மாயா பதார்த்தங்களை நிச்சயம் பண்ணாது சிவனையே நிச்சயம் பண்ணுகையால் **நற்புத்தி** யென்றும், பிரபஞ்ச பதார்த்தங்களை அபிமானியாமல் சிவனிடத்து அபிமானம் பண்ணுகையால் **நிரகங்கார** மென்றும், கண்டவற்றையெல்லாம் பற்றாமல் சிவனையே பற்றுகையால் **சுமனம்** என்றும், ஏகதேச மற்று வியாபகமாகையால் **நீள்ஞான** மென்றும், உள்ளமையாதலாற் **பாவ** மென்றும் அப்பத்திகளிற் றேற்றிய அத்தம் சிறப்புத் தங்கிய பெயர்களையுடைத்து.''

(அ. வெ. செய் 11. உரை)

என்பன அறிக

பத்தியிலிருந்து அத்தங்கள் தோன்றுவன. அத்தங்கள் பதிதல் வேண்டும். பதியாவிடின் இலிங்கானுபவம் உண்டாகாது.

## அகப்பூசை

38. ஆதார பீடங்கள் ஆறினும் அவ்வாறிலிங்க
மீதாக வைத்து விளங்கச்செய் வித்தகனே.

பொருள் :

அவ் ஆறு இலிங்கம் — ஆசார லிங்க முதலிய அவ் ஆறு இலிங்கங்கள், ஆதார பீடங்கள் ஆறினும் மீதாக வைத்து— மூலாதாரம் முதலாகவுள்ள பீடங்கள் ஆறிடத்தும் மேலிருப்பன வாக அமர்த்தி, விளங்கச்செய் வித்தகனே — விளங்கச் செய்கின்ற ஞானியோ.

விளக்கம் :

வித்தகன் — சதுரப்பாடுடையவன், ஞானி.

**ஆதாரம் ஆறு :**

மூலாதராம — சுவாதிட்டானம் — மணிபூரகம் — அநாகதம் விசுத்தி — ஆக்ஞை.

**ஆறு இலிங்கங்கள்** : ஆசார லிங்க முதலியவை

மூலாதாரமாகிய பீடத்தில் ஆசாரலிங்கம் கிரியா சத்தியுடன் கூடியிருக்கும். இதன் அக்கரம் நகாரம்

சுவாதிட்டான மாகிய பீடத்தில் குருலிங்கம் ஞான சத்தியுடன் கூடியிருக்கும். இதன் அக்கரம் மகாரம்

மணிபூரகமாகிய பீடத்தில் சிவலிங்கம் இச்சா சத்தியுடன் கூடியிருக்கும் இதன் அக்கரம் சிகாரம்

அநாகத மாகிய பீடத்தில் சங்கமலிங்கம் ஆதிசத்தியுடன் கூடியிருக்கும் இதன் அக்கரம் வகாரம்

விசுத்தியாகிய பீடத்தில் பிரசாதலிங்கம் பராசத்தியுடன் கூடியிருக்கும் இதன் அக்கரம் யகாரம்

ஆக்ஞை யாகிய பீடத்தில் மகாலிங்கம் சிற்சத்தியுடன் கூடி-யிருக்கும் இதன் அக்கரம் ஓங்காரம்

மூலாதாரம் குதத்திற்கும் லிங்கத்திற்கும் நடுவேயுள்ளது. நாலிதழ்ப் புட்ப வடிவாயுள்ளது

(குதம் — எருவாய்)

சுவாதிட்டானம் லிங்கத்திற்கும் நாபிக்கும் நடுவேயுள்ளது. ஆறிதழ்ப் புட்வ வடிவுடையது,

மணிபூரகம் நாபியை யிடமாகவுடையது, பத்திதழ்ப் புட்ப வடிவாயுள்ளது.

அநாகதம் இருதயத்தை யிடமாகவுடையது. பன்னிரண்டிதழ்ப் புட்ப வடிவாயுள்ளது.

விசுத்தி கண்டத் தானத்தை யிடமாகவுடையது. பதினாறிதழ்க் கமல வடிவாயுள்ளது.

ஆக்ஞை புருவ நடுவை இடமாகவுடையது. இரண்டிதழ்க் கமலமாயுள்ளது.

சிவயோகிகள் இங்ஙனம் உடலகத்தே சூக்குமமாயுள்ள ஆறு ஆதார இடங்களிலும் ஆறு இலிங்கங்களை அமர்த்திக் காண்பர். இது பாவலிங்கம், அந்தர் லிங்கம், சூக்கும லிங்கம் என்னப்படும்; புறத்தே கிரியைகளாற் செய்யப் பெறும் வழி பாட்டினும் அகத்தே சிவத்தைக் காணுதல் சிறப்புடையதாம். இந்த இலிங்கம் ஜீத்ந ரூபமாகவும் மந்திர ரூபமாகவும் இருக்கும். இந்த ரூபத்தைச் சிவயோகிகளே அறிவர்.

"மருவும் ஆதியா தாரநன் மனமலர் வரிவில்
புருவ நாப்பணென் றுரைத்திடப் பொழிந்திவற் றொன்றில்
திரிவில் நல்விளக் குருவமாஞ் சிவன்றனைப் பாவ
உருவ நற்பொருள் கொண்டருச் சிவப்பவன் யோகி."

(சித்-சிகா. ஞான-செய்.6)

(ஆதி ஆதாரம்-மூலாதாரம், மன்மலர்-இதய கமலம்

பாவ உருவம் நல்பொருள்-பாவனாத்திரவியம். வரிவில் நீண்ட
வில் போன்ற)

''புறம்பு காண்குவன் புல்லியன் ஈசனை
அறிந்த ஞானி யகமுறக் காண்பனால்''
(பிரபு-சாத.செய் 7)

என்பன ஈண்டறியத் தக்கன

இதனால் சிவயோகிகளது அகவழிபாட்டின் அருமை யுணர்த்தப்பெற்றது.

39 ஆறு முகங்களுமவ் வாறுசா தாக்கியமும்
ஆறு வருணமுமாம் ஆறிலிங்கம் என்றானோ

பொருள் :

ஆறு லிங்கம்-ஆசாரலிங்கம் முதலிய ஆறு இலிங்கங்கள், ஆறு முகங்களும் (ஆம்) சதாசிவப்பிரமத்தின் ஆறு முகங்களுமாகும், அ ஆறு சாதர்க்கியமும் (ஆம்)-அழகிய ஆறு சாதாக்கியங்களுமாகும், ஆறு வருணமும் ஆம்-ஆறு நிறங்களையுடையனவுமாம், என்றானோ-என்றருளியவனோ.

விளக்கம் :

''ஆம்'' ஏனைய ஈரிடத்தும் கூட்டியுரைக்கப்பட்டது.

**ஆறு இலிங்கம் :** ஆசாரலிங்கம் முதலியன.

**ஆறு முகங்கள் :** 1 சத்தியோஜாதம் 2 வாமதேவம் 3, அகோரம் 4. தற்புருடம் 5, ஈசானம் 6. அதோமுகம்.

**ஆறு சாதாக்கியம் :** 1. கன்ம சாதாக்கியம்
2. கர்த்திரு சாதாக்கியம் 3 மூர்த்தி சாதாக்கியம்
4. அமூர்த்தி சாதாக்கியம் 5. சிவசாதாக்கியம்
6 மகாசாதாக்கியம்.

"கன்மசா தாக்கியமும் கர்த்திருசா தாக்கியமுந்
தன்மசிவ மூர்த்திசா தாக்கியமு-நன்மையதா
மூர்த்தியோடு நற்சிவசா தாக்கியமு மாம்பெயர்கொள்
மூர்த்திகட்குப் பேரினும்ஐந் தாம்."

(அ, வெ.உண்மை செய்,9)

"ஆசார லிங்கம் குருலிங்கத் தோடுசிவம்
பேசுசர லிங்கம்ப்ர சாதலிங்கம்=ஓசைப்
பெயருமைந்தாங் கன்மத்தின் மாயேசர் பின்னு
நயமொடையைந் தாம்விக்ர கம்."

(அவெ.உண்மை.செய்.10)

என்றவாறு, கன்மசாதாக்கியருக்கு ஆசாரலிங்கமென்றும், கர்த்திரு சாதாக்கியருக்குக் குருலிங்கமென்றும், மூர்த்தி சாதாக்கியருக்குச் சிவலிங்கமென்றும், அமூர்த்தி சாதாக்கியருக்குச் சங்கமலிங்கமென்றும் சிவசாதாக்கியருக்குப் பிரசாதலிங்கமென்றும், (மகாசாதாக்கியருக்கு மகாலிங்கமென்றும்) பெயராம். இவை பிரதிப் பெயர்கள். இப் பெயர்கள் வீரசைவ நூல்களில் ஆளப்படுபவை.

## சாதாக்கியம் சத்திகளின்று தோன்றும்.

சதா+ஆக்கியம்=சாதாக்கியம். என்றும் இருப்பதாகச் சொல்லப்பட்டது.

"சாதாக் கியவகை தாம்சிவம் அமூர்த்தி
மூர்த்தி கருத்தா கரும மெனஐந்(து)
ஓதிய பரைமுதல் ஐந்திலுற் பாவமே"

(சதா-6)

என்றவாறு சிவசாதாக்கியம் பராசத்தியிலும், அமூர்த்திசாதாக்கியம் ஆதி சத்தியிலும், மூர்த்தி சாதாக்கியம் இச்சா சத்தியிலும் கர்த்திரு சாதாக்கியம் ஞான சத்தியிலும், கன்ம சாதாக்கியம் கிரியா சத்தியிலும், (மகா சாதாக்கியம் சிற் சத்தியிலும்) தோன்றும்.

சிற் சத்தியில் ஆயிரத்தில் ஓர் அம்சமானது பராசத்தி

பராசத்தியி் ஆயிரத்தில் ஓர் அம்சமானது ஆதிசத்தி

ஆதிசத்தியில் ஆயிரத்தில் ஓர் அம்சமானது இச்சாசத்தி

இச்சாசத்தியில் ஆயிரத்தில் ஓர் அம்சமானது ஞானசத்தி

ஞானசத்தியில் ஆயிரத்தில் ஓர் அம்சமானது கிரியாசத்தி.

சிற்சத்தியில் பத்தில் ஒரு கூறு விலிமையுடையது மகா சாதாக்கியம்

பராசத்தியில் பத்தில் ஒரு கூறு வலிமையுடையது சிவ சாதாக்கியம்

ஆதி சத்தியில் பத்தில் ஒரு கூறு வலிமையுடையது அமூர்த்தி சாதாக்கியம்

இச்சாசத்தியில் பத்தில் ஒரு கூறு வலிமையுடையது மூர்த்தி சாதாக்கியம்

ஞானசத்தியில் பத்தில் ஒரு கூறு வலிமையுடையது கர்த்திரு சாதாக்கியம்

கிரியாசத்தியில் பத்தில் ஒரு கூறு வலிமையுடையது கன்ம சாதாக்கியம்

சாதாக்கியர் அறுவருக்கும் **தத்துவர்** என்று பெயர்.

## சாதாக்கியர்களின் இயல்பு.

**1. சிவ சாதாக்கியம்.** சுத்த சிவமென்னும் பெயரை யுடையதாக் கரண வியாத்திக் கெட்டாததாய் அதி சூக்குமமாய் அளவுபடாத பிரகாசமாய்த் தியான ரூபமாய் விளங்கிச் சர்வ வியாபியாயிருப்பது.

**2. அமூர்த்தி சாதாக்கியம்** வடிவறுதியாய், அமூர்த்தி சாதாக்கிய மென்னும் பெயரையுடையதாய், விகற்ப மான கலைகளுக்கப்பாற்பட்டுத் தம்பாகாரமான ஒப்பற்ற லிங்கமாம். கோடி சூரியப் பிரகாச மாயிருப்பது.

**3. மூர்த்தி சாதாக்கியம்** மூர்த்தியென்னும் பெயரோடு காணப்பட்ட வடிவுடைத்தாய்க் காலாக்கினிபோலும் பிரகாசத்தையுடையதாய், இலிங்க வடிவமாய்த் தனது மூர்த்தத்திலே ஒரு திருமுகமும் மூன்று கண்களும் இரண்டு கைகளும் உடையதாயிருப்பது.

**4. கர்த்திரு சாதாக்கியம்** கர்த்திரு (கர்த்தா) என்னும் பெயருடையதாய், சுத்த படிகப் பிரகாசமான திவ்விய லிங்க ரூபமாம். தனது உச்சியில் நான்கு திருமுகமும் பன்னிரண்டு கண்களும் எட்டுக் கரங்களும், இவற்றில் வலப்புறக் கரத்தில் சூலம்-மழு-மான்-அபயமும், இடப்புறக் கரத்தில் பாம்பு-பாசம-மணி-வரதமும் ஆகிய ஆயுதங்களைத் தரித்துக் குறைவில்லாத இலக்கணங்களுடனே கூடியிருப்பது.

**5. கன்ம சாதாக்கியம்** கன்ம சாதாக்கியமென்னும் பெயரையுடையதாய் நாதமயமான ஞானலிங்கமும் விந்துமயமான கிரியா பீடமும் சிருட்டி முதலிய ஐந்தொழிலும் உடையதாயிருப்பது. மற்றும். ஐந்தொழிலைச் செய்வதால் கன்ம சாதாக்கியம், சர்வ முதன்மையும் உடைமையால் கர்த்திரு சாதாக்கியம், இலிங்க ரூபமாய் ஒரு திருமுகமுடைமையால் மூர்த்தி சாதாக்கியம், அருவமாயிருப்பதால் அமூர்த்தி சாதாக்கியம் பேரொளிப் பிழம்பாய்ப் பரமானந்த சொரூபமாயிருத்தலின். சிவசாதாக்கியம் என்று சொல்லப்படும். இவை காரணப் பெயர்கள்.

அருட் சத்தியாகிய சிற்சத்தியிற்றோன்றிய மகாசாதக்கியருக்கு முகம் அதோ முகம். பரமசிவனுக்கு அதோ முகத்தில் அறிதுயில் ஆதலானும் அம்முகத்தில் பூசாங்க்காரமும் அநுக்கிரகமும் இல்லையாதல் பற்றி அதுபற்றிய விரிவு நூல்களில் சொல்லப்படவில்லை. நித்திரையென்பது யாதொரு செயலும் இல்லாத நிலை.

பரசிவம் சிவசாதாக்கியம் முதலாக ஐவகைப்பட்டது சீவன் முத்தர்-சாதகர்-ஞானிகளாகியோர் தியானிப்பதற்காகவாம்.

**திருமுகங்களுக்குரிய நிறங்கள்**

1. சத்தியோ ஜாதமுகம் வெண்ணிறமுடையது.
(மேற்கு நோக்கி யிருப்பது)

2. வாமதேவ முகம் செந்நிறமுடையது.
(வடக்கு நோக்கி யிருப்பது)

3. அதோ முகம் கறுப்பு நிறமுடையது.
(தெற்கு நோக்கி யிருப்பது)

4. தற்புருட முகம் குங்கும நிறமுடையது.
(கிழக்கு நோக்கி யிருப்பது)

5. ஈசான முகம் படிக நிறமுடையது,
(ஆகாயத்தை நோக்கியிருப்பது)

6. அதோ முகம் சித்திர நிறமுடையது.
(கீழ் நோக்கியது இருதய முகம்)

''நிறங்களோ ரைந்துடையாய்'' (திருவாசகம்.சிவபுராணம்49) என்னும் அருள் வாக்கு.

'ஆறு' என்ற சொற் பொருள் தொடர்ந்து வருதலின் இது சொற்பொருள் பின் வரு நிலையணி.

## குரு — இலிங்கம் — சங்கமம்

### குரு

40. பத்தனொடு மாயேசன் பார்ப்பரிய ஆசார
மெய்த்த குரு நான்கும் விளங்கு குரு என்றானோ.

பொருள் :

பத்தனொடு மாயேசன் பத்தனும் மகேசனும், பார்ப்பரிய ஆசாரம்—காண்டற்கரிய ஆசாரலிங்கமும் மெய்த்த குரு நான் கும்-நித்தியமாகவுள்ள குருலிங்கமும் ஆகிய நான்கும், விளங்கு குரு என்றானோ-விளங்கா நின்ற குரு என்றுரைத்தவனே.

விளக்கம் :

அங்கத் தலத்திலுள்ள பத்தனும் மகேசனும், இலிங்கத் திலுள்ள ஆசாரலிங்கமும் குருலிங்கமும் குரு ஆகும்.

## இலிங்கம்

40. பிரசாதியு மப் பிராணலிங்கி தானும்
உரைசால் சிவசரமும் ஓங்கிலிங்கம் என்றானோ.

பொருள் :

பிரசாதியும் அப்பிராண லிங்கி தானும்—பிரசாதியும் அந்தப் பிராணலிங்கியும், உரைசால் சிவ சரமும் புகழ் நிறைந்த சிவலிங்கமும் சங்கமலிங்கமும் (ஆகிய நான்கும்), ஓங்கு இலிங் கம் என்றானோ—பெருமை மிகுந்த இலிங்கம் என்று ரைத்தவனோ

விளக்கம் :

அங்கத் தலத்திலுள்ள பிரசாதியும் பிராணலிங்கியும், இலிங்கத் தலத்திலுள்ள சிவலிங்கமும் சங்கமலிங்கமும் இலிங்கமாகும்.

## சங்கமம்

42. ஒழிந்தஅங்க லிங்கம் ஒருநான்கு நம்பால்
எழுந்தருளுஞ் *சங்கமமென்* றின்பந் தருவானோ.

பொருள் :

ஒழிந்த அங்க லிங்கம் ஒரு நான்கும்—மேற் கூறிப் போந்தவை நீங்க மற்றுள்ள சரணன் ஐக்யன் என்னும் அங்கமும் பிரசாத லிங்கம் மகாலிங்கமென்னும் இலிங்கமும் ஆகிய ஒப்பற்ற நான்கும், நம்பால் எழுந்தருளும் சங்கமம் என்று இன்பம் தருவானோ—நம்மிடம் எழுந்தருளும் சங்கமம் ஆமென்று கூறிப் பேரின்பத்தைத் தந்தருள்பவனோ.

விளக்கம் ;

அங்கத் தலத்திலுள்ள சரணன் ஐக்யன். இலிங்கத்தலத்திலுள்ள பிரசாதலிங்கம் மகாலிங்கம் ஆகிய நான்கும் சங்கமம் ஆகும்.

43. உருவம் உரு அருவம் உற்றறிதற் கெட்டா
அருவமென நின்றிடுமவ் ஆறுமெனச் சொன்னானோ.

பொருள் .

அவ் ஆறும்—ஆசாரலிங்க முதலிய அவ் ஆறு இலிங்கங்களும். உருவம் உரு அருவம்—உருவமாகவும் உருஅருவமாகவும், உற்று அறிதற்கு எட்டா அருவம் என நின்றிடும் எனச் சொன்னானோ—பொறிகள் அணுகி அறிதற்கு இயலாத அருவம் என்று கூறத்தக்கனவாகவும் இருக்குமென்று உரைத்தவனோ.

விளக்கம் ;

இஷ்டலிங்கம் தோன்றும் உருவமாயிருப்பது. இஷ்டலிங்கம் ஆசாரலிங்கம் குருலிங்கம் என இருவகையான படியால் அவ்விரண்டும் உருவம் (சகளம்) ஆம்.

பிராணலிங்கம் தோன்றித் தோன்றாவுருவாய் மனத்திற்குத் தோற்றிக் கொண்டிருப்பது. பிராண லிங்கம் சிவலிங்கம் சங்கமலிங்கமென இருவகையானபடியால் அவ்விரண்டும் உரு அருவம் (சகள நிஷ்களம்) ஆம்.

பாவலிங்கம் தோன்றாவுருவாய் அறிவிற்குத் தோற்றிக் கொண்டிருப்பது. பாவலிங்கம் பிரசாதலிங்கம் மகாலிங்கம் என இருவகையானபடியால் அவ்விரண்டும் அருவம் (நீஷ்களம்)ஆம்.

44. மாசுதரு தூலாதி மானவிசு வாதியே
ஆசில் தியாகாங்கம் ஆதியாம் என்றானோ.

பொருள் ;

மாசுதரு தூலாதி—அசுத்த மாயையாலுண்டான தூலவுடல் முதலியவற்றை, மான விசுவாதியே—அபிமானிக்கின்ற விசுவன் முதலியனவே, ஆசில் தியாகாங்கம் ஆதியாம் என்றானோ குற்றமற்ற தியாகாங்கம் முதலியனவாம் என்றுரைத்தவனோ.

விளக்கம் :

தூலாதி என்பன தூலவுடல்—சூக்குமவுடல்—காரணவுடல்களாம். விசுவாதி : விசுவன்—தைசதன்—பிராக்ஞன்.

தூல தேகத்தை அபிமானிக்கின்ற ஆத்மாவுக்கு விசுவன் என்றும், சூக்கும தேகத்தை அபிமானிக்கின்ற ஆத்மாவுக்கு தைசதன் என்றும், காரணதேகத்தை அபிமானிக்கின்ற ஆத்

மாவுக்குப் பிராக்ஞன் என்றும் பெயர். இவை ஆத்மாவுக்கு அபிமானப் பெயர்கள்.

தியாகாங்கமானது தூலவுடல் சம்பந்தமாய் சாக்கிராவத்தையையடைந்து விசுவன் எனப்படும்.

போகாங்கமானது சூக்குமவுடல் சம்பந்தமாய்ச் சொப்பனாவத்தையையடைந்து தைசதன் எனப்படும்.

யோகாங்கமானது காரணவுடல் சம்பந்தமாய்ச் சுழுத்தி அவத்தையையடைந்து பிராக்ஞன் எனப்படும்.

இம் மூன்று அங்கங்களும் முறையே சீவாத்மா-அந்தராத்மா-பரமாத்மா என்றும் பெயர் பெறும்.

மானம்-அபிமானம், ஒன்றைத் தன்னுடையதாக நினைத்துக் கொண்டாடுதல்.

மாசு-அசுத்தம், அசுத்தமாயையை இங்குக் குறிக்கும்.

**தூலவுடல்.**

ஐம்பூதம், ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, வாயுக்கள் ஐந்து, அந்தக் கரணங்கள் நான்கு, ஞானம் ஒன்று ஆக இருபத்தைந்து தத்துவங்களைக் கொண்டது.

**சூக்குமவுடல்.**

கன்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, பிராணாதி வாயுக்கள் ஐந்து, மனம் புத்தி என்னும் அந்தக் கரணங்கள் இரண்டு ஆகப் பதினேழு தத்துவங்களைக் கொண்டது.

**காரணவுடல்.**

பிரகிருதியே காரணவுடல்.

45. விரிந்தன எலாமும விரிந்தமுறை சென்றே
ஒருங்கி அங்கலிங்க உபயமாம் என்றானோ.

பொருள் ;

விரிந்தன எலாமும் — (ஒன்றாகிய பரசிவத்தினின்று) பலவாய் விரியப் பெற்றனயாவும், விரிந்த முறை சென்றே-எங்ஙனம் விரிந்தனவோ அம்முறையே சென்று, ஒருங்கி அங்க லிங்க உபயமாம் என்றானோ-சேர்ந்து அங்கம் இலிங்கம் என இரண்டாகுமென்றுரைத்தவனோ.

விளக்கம் :

பரசிவம் தன்னுடன் கூடியுள்ள சிற்சத்தியால் இலிங்கம் (சிவன்) அங்கம் (ஆன்மா) என இரண்டாயிற்று. அவ்வாறாகிய ஒவ்வொன்றும் மூன்று, ஆறு ஆக இலிங்கத் தலம் ஆறும் அங்கத்தலம் ஆறும் எனப்பட்டன. இலிங்கத்தலம் அர்ப்பித முறையால் முப்பத்தாறாகவும் இருநூற்றுப் பதினாறாகவும் விரிந்தன. எவ்வாறு பெருகினும் இலிங்கத்தலம் ஆறாகவும் அங்கத்தலம் ஆறாகவுமே நிற்கும். இது **பிரவிருத்தி மார்க்கம்.**

இவ்வாறாகிய இலிங்கத்தலம் விரிந்தவாறே இருநூற்றுப் பதினாறு முப்பத்தாறினும், முப்பத்தாறு ஆறினும், ஆறு மூன்றினும், மூன்று ஒன்றினும் ஒடுங்கும். அங்ஙனமே அங்கத்தலமும் ஆறு மூன்றில், மூன்று ஒன்றில் அடங்கும் ஆகவே இலிங்கம் அங்கம் என இரண்டாகிப் பின் இரண்டும் ஒன்றாய் அடங்கும், இது **நிவர்த்தி மார்க்கம்.**

இங்கு "ஒருவாறும் இன்றியிது என்றுணர அரியபரம்" என்னும் சிவஞான பாலைய தேசிகர் பிள்ளைத் தமிழ்ப் பாடல்15 இப்பொருளைக் கொண்டிருத்தல் அறியத் தக்கது,

"ஒன்றிரண் டாயவை பற்பலவாகி யுதித்த முறை
சென்றிரண் டாகிப்பின் ஒன்றாகி நிற்குஞ் சிவமொடங்கம்

என்றிரண்டாக உரைப்பார் நினதியல் எய்திலர்காண்

மின்திரண் டாலன்ன மேனியனே என்கை வித்தகனே.''

(நிர.மா செய்.15)

என்பதும் உரைக்கும்.

''ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க.''

(திருவாசகம். சிவபுராணம் 5)

என்றவாறு பரசிவம் ஒன்றே அன்பர்களுக்கு அருள்புரிய அவர் தம் நிலைக்கேற்பப் பலவாயும் விளங்கும்

## 46. கடத்தின் உபாதியா காயம் உற்றவாபோல்
## அடுத்த உபாதியால் அங்கலிங்க மென்றானோ.

பொருள் .

கடத்தின் உபாதி ஆகாயம் உற்றிவாபோல்-(ஆகாயம் ஒன்றேயாயிருந்தும்) கடத்தின் காரணமாக உண்டான உபாதி பேதத்தினால் கடாகாயம் மகாகாயம் என்று இருவிதமாயினாற் போல, அடுத்த உபாதியால் அங்க லிங்கம் என்றானோ-(பிரமம் ஒன்றேயாயிருந்தும்) பொருந்திய உபாதி பேதத்தினால் அங்கம் (சீவன்) என்றும், லிங்கம் (சிவன்) என்றும் இரண்டு விதமாயினவென்று அருளியவனோ.

விளக்கம் :

ஆகாயத்திற்குக் கடம் உபாதி, சீவனுக்கு அவித்தை உபாதி. சிவனுக்கு மாயை உபாதி. கடம் உடைந்தால் ஆகாயம் பேதமின்றி ஒன்றாவதுபோல் அவித்தையும் மாயையும் நீங்கினால் சீவனும் சிவமும் ஆகிய இரண்டும் ஒரு பொருளாகிப் பிரமத்தையடையும். இங்குச் சிவம் என்றது பரசிவம் அன்று. சிற்சத்தியின் சலனத்தாலுண்டான சிவம்.

## உபாதி.

தன்னிடத்துள்ள தன்மையை மற்றொரு பொருளிடத்து இருப்பதாகத் தோற்றுவிக்கும் பொருள்.

செம்பரத்தம்பூ தன்னிடத்துள்ள செந்நிறத்தைத் தன்மேல் வைத்துள்ள கண்ணாடியில் உண்டாகத் தோற்றுவிக்கும். கண்ணாடி சுத்த வெண்ணிறத்தாயிருந்தும் செம்பரத்தப் பூவின் சம்பந்தத்தால் கண்ணுக்குச் செந்நிறக் கண்ணாடியாகந் தோன்றும். இங்குச் செம்பரத்தம்பூ உபாதியாகும். செந்நிறம் உபாதியான செம்பரத்தம் பூவினதேயன்றிக் கண்ணாடிக்கு இல்லை.

''அப்பரற்கு உபாதி யாகி யமோக காரணியா மாயை,
பொய்ப்புறும் அவித்தை யெண்ணிற் போத்திருப்
பசுவென்றோதும்
ஒப்பருஞ் சீவர்க் கெல்லாம் உபாதியாய் மோகஞ் செய்யும்
எய்ப்புறு பகுதி பாச மெனச்சம குணமாய் நின்று.''
(வே-சூ-செய்.65)

(அமோக காரணியம்-மோக மின்மையைச் செய்வதற்குக் காரணமுடையவளாம். போத்திரு-போக்தா, அனுபவிப்பவன். மோகம் செய்யும்-மயக்கத்தைச் செய்யும்.)

என்னும் பாடல் சிவத்திற்கு மாயை உபாதியென்பதையும் சீவனுக்கு அவித்தை உபாதியென்பதையும் அறிவிக்கும்,

## அவித்தை.

''மூலப் பிரகிருதியே ஆத்மாவுக்கு அஞ்ஞான தமோ ரூபினால் ஆவரணசத்தியாய் அவித்தை என்னப்படும். ஆத்மா வினுடைய போகத்துக்குத் தேகம் மனம் பிராண இந்திரியு

ரூபத்தினால் சாதனமாகி விடயங்களில் அகங்கார மமகாரங் களைப் பிறப்பிக்கையால் விட்சேபசத்தி என்னப்படும்.''
(வீ.த.பி.)

என்பதுங் காண்க,

''தன்சத்தி யாலாம் தலம்அங்க லிங்கமென'' (கண்ணி 2) என்று கூறியது தோற்றம். இங்குக்கூறியது ஒடுக்கம்.

47. தங்கும் இலிங்கமாந் தத்பதமத் தொம்பதமே
அங்கம் அயிக்கியம் அசிபதமென் றாண்டானே.

(பொருள்)

தத் பதம் தங்கும் இலிங்கமாம் — தத்துவமசி மகா வாக்கியத்தில் தத் என்னும் பதம் எங்குந் தங்கியிராநின்ற இலிங்கத்தைக் (சிவத்தை) குறிப்பதாம். அத் தொம் பதமே அங்கம் (ஆம்) அசிபதம் அயிக்கியம் (ஆம்) என்று ஆண்டானே — அதன்கண் உள்ள துவம் என்னும் பதம் அங்கத்தைக்(ஆன்மாவை) குறிப்பதாம். அசி என்னும் பதம் அயிக்கியம் என்னும் பொருளைக் குறிப்பதாமென்றுபதேசித்து ஆட்கொண்டவனோ.

விளக்கம் :

''ஆம்'' என்பது தொம்பதம், அசிபதம் என்பவற்றோடுங் கூட்டப் பட்டது. தத்துவமசி மகா வாக்கியம் சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்திலுள்ளது. தத்-அது. த்வம்=நீ, அசி-ஆனாய் என்பது பதப்பொருள். ''மறை அது நீயானாய் என்ன அத்துவிதந் தன்னைப் புகலும்'' (மனோலயம்.செய் 19) எனவும், ''மங்கலந்தரு மாமறையின் முடி தங்குறுந் தத்துவமசி'' (ஆரோகணம்.செய்.11) எனவும் பிரபு லிங்க லீலை இம்மகாவாக்கியம் இலிங்காங்க ஸம்யோகத்தைக் குறிக்கும். எங்ஙனமெனில், தத் என்னும் பதத்தின் பொருள் இலிங்கம், த்வம் என்னும் பதத்தின் பொருள் அங்கம், அசி என்னும் பதத்தின்

பொருள் ஸம்யோகம். அதாவது இலிங்காங்களின் ஐக்கியம் என்னும் பொருளதாமாதலின் என்க.

''தத்பதமே லிங்கந் தகும்அங்கந் தொம்பதமாம்
நிற்கும் அசிபதமே நேரயிக்கப்-பொற்பதென
அங்கலிங்க சங்கமென்ன அற்றே சுருதிசொன்னோம்
தங்கியசற் காரியத்தால் தான்.''

(அ.வெ.செய்.77)

என்பதும்,

'' லிங்கம் தத்பதமாக் யாதம்
அங்கம் த்வம்பத மீரிதம்
ஸம்யோ கோஸி பதம் ப்ரோக்தம்
அந்யோரங்க லிங்கயோ ''

என்னும் ஆகம வசனமும் காண்க.

தத்துவமசி — இலிங்க ஸம்யோகம், இலிங்காங்க ஐக்யம், இலிங்காங்க சங்கம் என்பன ஒரு பொருள.
''தற்பதம்'' — பிரதிபேதம்.

43. ஆகமுயிர் துரியனுய் நின்றபோது எமைத்தான்
சோகமனத் தானுகத் தோன்றும் பெருமானே.

(பொருள்)

ஆகம் உயிர் — தேகத்தைத் தணக்கிடமாகக் கொண்டுள்ள ஆன்மா, துரியனுய் — துரியா அவத்தையுடையவனுய், சோக-மனத்தானுக — அது நான் என்னும் கருத்தினனுக, நின்ற-போது — (இருந்தபோது, எமைத் தான் — எம்பால் சிவஞானி

யாகிய தான், தோன்றும் பெருமானே — சிவசொருபமாகக் காட்சி நல்கும் பெருமானே.

(விளக்கம்)

துரியன் - அய்ந்தவத்தைகளுள் நான்காவதாகிய துரியம் (சிவாநுபவம்) என்னும் அவத்தையினன். அவத்தை — உணர்வு நிலை. அய்ந்தவத்தை: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் துரியாதீதம். ''சுத்தன்'' துரியன் அவதூதன் துறவி சிவயோகி''
(ஒழி — அருள் செய் 40)
என்றலின் துரியன் சிவயோகியாவன்.

ச : + அஹம் = சோகம், அது நான் என்பது பதப்பொருள். அது என்பது தத்துவமசி மகாவாக்கியத்தின் முதற்பதமாகிய தத் பதத்தின் பொருளது. ''அது'' சிவபெருமானைக் குறிப்பதாம். இது சிவோகம்பாவனை என்றுங் கூறப்பெறும். சிவோகம் (சிவ + அஹம்) சிவ — சிவன், அஹம் — நான், பாவனை தியானம்.

எமை — எம்பால், உருபு மயக்கம்.

49. அமைத்தபரம் சுத்தத்து, அசுத்தமதில் சீவன்,
தமப் பகுதி யில்தோன்றும் தத்துவங்கள் என்றானோ.

பொருள் :

அமைத்த பரம்-தத்துவங்களுள் ஒன்றாக அமைத்துள்ள சிவம், சுத்தத்து-சுத்த மாயையிலும், சீவன் அசுத்தமதில்-புருடன் அசுத்த மாயையிலும், தத்துவங்கள் தமப்பகுதியில் தோன்றும் என்றானோ-ஆன்ம தத்துவங்கள் பிரகிருதி மாயையிலும் தோன்றுமென்று கூறியவனோ.

விளக்கம் :

பரம்-மேலான சிவம். தமம்+புகுதி=தமுப் பகுதி.
தமம்-மாயை. பகுதி-மூலப் பகுதி, மூலப் பிரகிருதி.

மாயை உலகவுற்பத்திக்கு மூல காரணமாய் நித்தமாய்ச் சடமாய் முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியாயுள்ளது. அது சுத்த மாயை-அசுத்த மாயை என இருவகைப்படும்.

சுத்த மாயையில் சுத்த தத்துவமாகிய சிவம்-சத்தி-சதாசிவன் - ஈசுவரன் - சுத்தவித்தை ஆகிய ஐந்தும் தோன்றும். இவற்றுள் சுத்த மாயையின் முந்திய விருத்தியாகவுள்ளது சிவம். பரசிவம் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்தது. சிற்சத்தியோடு பிரிப்பின்றி நிற்கும் சிவபெருமான் ஆன்மாக்களின் மல நோயைத் தீர்த்தற்பொருட்டுச் சுத்தமாயையில் தொழிற் செய்யத் திருவுளங் கொண்ட அவதரம் சிவம் ஆதலின், "அமைத்த பரம் சுத்தத்துத் தோன்றும்" என்றார்.

அசுத்த மாயையில் காலம்-நியதி-கலை-வித்தை-அராகம்-புருடன்-மாயை என்னும் சுத்தாசுத்த தத்துவங்கள் ஏழும் தோன்றும். இவற்றுள் புருட தத்துவமும் (புருடனும்)ஒன்றாம். ஆதலின், "அசுத்தமதில் சீவன் தோன்றும்" என்றார்.

## மூலப் பகுதி.

இஃது ஆன்மா அநுபவிக்கப்படும் பொருள் ரூபமாய் நின்ற தத்துவவுலகிற்கெல்லாம் மூல காரணமாதல் பற்றி மூலப்பகுதியெனப்படும். இஃது அசுத்தமாயையின் விருத்தியாகும். இதில் ஆன்மதத்துவங்கள் இருபத்து நான்கும் தோன்றும்.

அளவை : மண்-நீர்-தீ-காற்று-வெளி ஆகிய பூதங்கள் ஐந்து.

சப்தம்-பரிசம்-ரூபம் - இரசம் - கந்தம் ஆகிய தன்மாத்திரைகள் ஐந்து.

மெய்-வாய்-கண்-மூக்கு-செவி ஆகிய ஞானேந்திரியங்கள் ஐந்து.

வாக்கு-பாதம்-பாணி-பாயு-உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்கள் ஐந்து.

மனம்-புத்தி-சித்தம்-அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் நான்கு. ஆதலின், "தம்பப்குதியில் தத்துவங்கள் தோன்றும்" என்றார்,

இக் கண்ணியின் பொருள் ஒரு மாணவனுக்கு ஐய வினாவிற்குக கூறிய தெளிவுரைபோல் அமைந்துள்ளது.

## உலகத் தோற்றம்

50: நிரஞ்சன சூனியமா நிட்களத்தில் சித்து
வருஞ்சுடர் சின்னாதி வாய்ப்பவெனச் சொன்னானோ.

பொருள் :

நிரஞ்சன சூனியமா(ம்)-நிரவயவலிங்கம் நிரஞ்சன லிங்கமாகும். சூனிய லிங்கமாகும். நிட்களத்தில்-இவ்வாறே ஆன நிட்கள லிங்கத்தில் சித்து சுடர் சின்னாதாதி வாய்ப்ப வரும் எனச் சொன்னானோ-சிவசித்து ஒளிபொருந்திய சின்னாதம் சித்பிந்து சித்கலை ஆகியவை உண்டாகத் தோன்றுமென்று அருளியவனோ.

விளக்கம் ;

நிரவயவ லிங்கமென்பது மனம் வாக்கிற்கெட்டாத பரம்பொருள் நிர்+ அவயவம் = நிரவயவம். அநிர்வாச்சியம் என்ப. அஃதாவது இன்ன தன்மைத்தென்று சொல்லப்படாத பொருள். "நிரவயயந்தான் அவயவ மில்லாதாமால்"

(வீர.பு செய்.135)

அப்பரம் பொருள் தன்னுடைய நுண்மையின் நுண்மை நினைவினால் (அத்திஅதி சூக்கும நினைவினால்)
**நிரஞ்சன பிர்ம மாயிற்று.**

அந்த நிரஞ்சன பிர்மம் தனது மிக நுட்ப நினைவினால் (அதி சூக்கும நினைவினால்) **சூனிய லிங்க**மாயிற்று.

அந்தச் சூனியலிங்கம் தனது தூல நினைவாகிய (சுசூக்கும நினைவு) சிதாகாச ரூபமான **நிட்களப் பிர்ம**மாயிற்று,

நிரவயவ லிங்கம் இதுவே நிரஞ்சனமாயிற்று. இதுவே சூனியமாயிற்று. இதுவே நிட்களமாயிற்று.

நிட்களப் பிர்மத்திலுண்டான உலகப் படைப்பு நினைவு **நிட்களசித்து.** இதுவே மூலசித்து என்றும் சிவசித்து என்றும் சித் பிரணவம் என்றும் சொல்லப்படும். நிட்கள சித்தி னுடைய நுட்ப (சூக்கும) நினைவே **சித்கலை.** அந்தச் சித்தினுடைய தூல நினைவு **சின்னாதம்.** (சித்+நாதம்). அந்தச் சித்கலை சின்னாதம் இரண்டின் திரட்சியே சித்பிந்து. நிட்கள சித்தினால் சின்னாதம் சித்பிந்து சித்கலை உண்டாயின.

நிரஞ்சனம்-"நிரஞ்சனம் ஆங்காரத்தால் நினைப்பறிவில்லா தாகும்." (வீர-பு-செய்.41) நினைப்பு-நினைத்தாலும், அறிவு -அறிதலும். சூனியலிங்க மென்கிற பரசிவத்தலம் சுயானந்தத் துள்ளே பரவசமாயிருக்கும். அதி சூக்குமமாயிருக்கும். சூனியம்-ஆனந்தத்தைத் தவிர வேறு பொருள் தோன்றாமை. நிட்களம்-வடிவமில்லாதது

"ஆம்" என்பதை நிரஞ்சனம் என்பதனோடுங் கூட்டப் பட்டது. 'ஆம்' என்னும் பயனிலைக்கு 'நிரவயவ லிங்கம்" என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

இவ்விலிங்கங்களின் விளக்கம் சித்தாந்த சிகாமணி என்னும் நூலில் அங்கலிங்கோத்பவம் என்னும் பகுதியிலும், வீரசைவ தத்துவப் பிரகாசம் என்னும் நூலில் சிவதத்துவோதயப் பிரகரணத்திலும் காணலாம்.

51. மூலசித்து நாதாதி மூன்றும் புணர்ந்தாகும்
மாலகற்றுஞ் சோதிமய மாலிங்க மென்றானோ.

பொருள் :

மூலசித்து-மூலசித்துடன், நாதாதி மூன்றும் புணர்ந்து-சின்னாதம் சித்பிந்து சித்கலை ஆகிய மூன்றுஞ் சேர்ந்து, மால் அகற்றும் சோதிமய மாலிங்கம் ஆகும் என்றானோ-மயக்கத்தைப்போக்கும் சோதி மயமாகவுள்ள மகாலிங்கப் பிரமம் தோன்றுமென்றருளியவனோ.

52. அகராதி மாலிங்கத் தாகியவை கூடித்
தகவாம் ஓங்கார சதாசிவமா மென்றானோ.

பொருள் :

மாலிங்கத்து-மகாலிங்கத்தில், அகராதி ஆகியவை கூடி, அகர முதலியவை சேர்ந்து, (அஃதாவது அ-உ-ம் சேர்ந்து) தகவு அம் ஓங்கார சதாசிவமாம் என்றானோ-தகுதியுடைய தாகிய ஓம் என்னும் பிரணவரூபமான சதாசிவப்பிர்மம் ஆகுமென்றருளியவனோ.

விளக்கம் :

சின்னாதம், சித்பிந்து, சித்கலை ஆகியவை முறையே அகார-உகார-மகாரங்களாயின.

அ-உ-ம் இவை கூடி ஒலித்தால் ஓம் என்னும் ஒலி உண்டாகும். அதுவே பிரணவமாம், "அகார உகார மகாரம் பிரணவமாம்."

(சிவ-தீபம், பொது, செய்.17)

50, 51, 52 கண்ணிகளின் பொருளைக் கீழ்வரும் பாடலில் ஆசிரியர் உணர்த்தியுள்ளார்.

"நிரஞ்சன சூனிய நிட்கள மாகியந் நிட்களத்தின்
வருஞ்சிவ சித்துசின் னாதவிந் துக்களை மன்னி யொன்றாய்
அருஞ்சுட ராயக ராதிப் பிரணவ மாகி நின்று
தருஞ்சகம் யாவுமென் கையா லத்திற் றனிமுதலே."

(தனிமுதல், தருமென்க விந்துக்களை-சித்பிந்து, சித்கலை.)

## 53. அந்தச் சதாசிவத்தின் ஐம்முகத்தும் ஐம்பூதம்
## வந்துற்று இதயத்து ஆன்மாவருமிங் கென்றானோ.

பொருள் :

அந்த-மேற்கூறப்பெற்ற, சதாசிவத்தின்-சதாசிவப் பிரமத்தின், ஐம்முகத்தும்-ஐந்து திருமுகங்களிலும், ஐம்பூதம் வந்துற்று-மண்-நீர்-நெருப்பு-காற்று-வெளி என்னும் ஐந்து பூதங்களுந் தோன்றி (உள்ளனவாக). இங்கு இதயந்து ஆன்மா வரும் என்றானோ-இந்நிலையில் சதாசிவப் பிரமத்தின் இருதயத்தில் உயிர்கள் தோற்றமாம் என்றருளியவனோ.

விளக்கம் :

"உள்ளனவாக" என்ற சொல் வருவித்துரைக்கப்பட்டது. ஐந்து திருமுகங்கள் சத்தியோஜாதம் முதலாயின. ஐந்து திருமுகங்களிலும் திரு ஐந்தெழுத்துகள் உண்டாயின.

"சத்தியோ ஜாத முகத்தில் நகாரமும், வாம தேவமுகத்தில் மகாரமும், அகோரமுகத்தில் சிகாரமும், தற்புருட முகத்தில்

வுதாரமும், ஈசான முகத்தில் யகாரமும் உண்டாயின, அந்தப் பஞ்சாக்ஷரத்தில் பஞ்ச கலைகள் உண்டாயின.

நகாரத்தில் நிவிர்த்தி கலை, மகாரத்தில் பிரதிட்டா கலை, சிகாரத்தில் வித்தியா கலை, வகாரத்தில் சாந்தி கலை, யகாரத்தில் சாந்தியாதீத கலை ஆகியவை உண்டாயின.

நிவிர்த்தி கலையில் சித்தம், பிரத்திட்டா கலையில் புத்தி, வித்தியா கலையில் ஆகங்காரம், சாந்தி கலையில் மனம், சாந்தியாதீத கலையில் ஞானம் ஆகியவை உண்டாயின. அந்தப் பஞ்ச கரணங்களிலும் பஞ்ச தன்மாத்திரைகள் உண்டாயின.

சித்தத்தில் கந்தமும் புத்தியில் இரசமும் அகங்காரத்தில் உருவமும் மனத்தில் பரிசமும் ஞானத்தில் சத்தமும் உண்டாயின. அந்தப் பஞ்ச தன் மாத்திரைகளில் பஞ்ச பூதங்கள் உண்டாயின.

மணப் பொருளில் மண், சுவைப் பொருளில் நீர், ஒளிப் பொருளில் நெருப்பு, பரிசப் பொருளில் வாயு ஓசைப்பொருளில் ஆகாயம் என பஞ்ச விடயங்களில் பஞ்ச பூதங்கள் உண்டாயின.''

(அக்-சி.உரைநடை)

| 1 முகம் | 2 அக்கரம் | 3 கலை | 4 அந்தக்கரணம் | 5 தன்மாத்திரை | 6 பூதம் |
|---|---|---|---|---|---|
| 1. சத்தியோஜாதம் | ந | நிவிர்த்தி கலை | சித்தம் | மணம் | மண் |
| 2. வாமதேவம் | ம | பிரதிட்டா கலை | புத்தி | இரசம் | நீர் |
| 3. அகோரம் | சி | வித்தியாகலை | அகங்காரம் | உருவம் | நெருப்பு |

4, தற்புருடம் —வ—சாந்திகலை —மனம்— பரிசம்—காற்று

5 ஈசானம் —ய – சாந்தியாதீத—ஞானம்—சத்தம் —ஆகாயம்
கலை

"அங்கமொரு நான்குநிறைந் தொருமுப் தெண்கலையும்
அடைந்தொன் றாகிப்

பொங்குறுமொண் பாவனகலா மூர்த்தி யெனவுருவம்
பொருந்தி னோனாய்

மங்கலஏ றிவர்ந்தேதன் முகங்களைந்திற்
பூதமைந்தும் வருவித்துத் தந்தந்

தங்களிற்சேர்ந் திருபானைந் தாகவும்
உண்முகத்துயிரைச் சாரச் செய்வன்"

(வீ.த, பி.சிவதத்து,செய்ச 82)

## இதற்குப் பழையவுரை

"அங்கப் பிரத்தியாங்க சாங்கோ பாங்காதி சர்வலக்ஷண சம்பூர்ணமாம் முப்பத்தெட்டுக் கலைகளுடனே கூடிய பாவன்ன கலா மூர்த்திகளென்னும் சரீரமுள்ளவராய் இடபாரூடராய் விளங்கித் தன்னுடைய பஞ்ச முகத்திற் பஞ்ச பூதங்களைப் பிறப் பித்துப் பஞ்ச பூதங்களின் கலப்பினால் இருபத்தைந்து தத்துவங் களையுண்டாக்கித் தன்னுடைய இதய முகத்தில் பிறந்த பிராணாங்கிசன்ன ஆத்மாவிற்குச் சம்பந்தம் பண்ணி."

மேற் கூறியவாற்றால் ஐம்பூதங்களின் தோற்றமும் ஆன்மாவின் தோற்றமும் அறியப்பெறும்.

54. அப்பூதம் பஞ்சீகரித்து இருபத் தைந்ததாகி
மைப்பூணும் ஆன்மாவை மன்னியிடும் என்றானோ.

பொருள் ;

அப்பூதம்-மண் முதலாகிய அவ்வைம் பூதங்கள், பஞ்சீ கரித்து இருபத்தைந்தாகி-பஞ்சீகரணமடைந்து இருபத்தைந்து தத்துவங்களாலாகிய உடலாகி, மைப்பூணும் ஆன்மாவை மன்னியிடும் என்றானோ-ஆணவமலத்தைப் பொருந்தியுள்ள ஆன்மாவை அடையுமென்றருளியவனோ.

விளக்கம் :

பஞ்சீகரணம்-பஞ்சபூதங்களின் கூட்டம். மை-இருள். ஈண்டு இருள் மலமாகிய ஆணவத்தைக் குறித்தது. பஞ்சீகரண மாவது ஒரு பூதத்தை இரண்டு பங்காக்கி ஒரு பாதி நிற்க, மற்றப் பாதி ஒவ்வொன்றையும் நான்கு கூறாகச் செய்து ஒவ்வொரு நான்கு கூறையும தன்பாதி நீங்கிய ஏனைய பாதி போடு கூட்டலாம்.

## ஐம் பூதங்களின் பஞ்சீகரணம்

''ஆகாயத்தின் அம்சமே ஞானம். ஆகாயம் வாயுவில் கூடில் மனம், ஆகாயம் அக்கினியிற் கூடில் அகங்காரம், ஆகாயம் அப்புவில் கூடில் புத்தி, ஆகாயம் பிருதிவியில் கூடில் சித்தம்.

## இவை ஐந்தும் ஆகாய பஞ்சீகரணம்

வாயு ஆகாயத்தில் கூடில் சமான வாயு, வாயுவின் அம்சமே உதான வாயு. வாயு அக்னியில் கூடில் வியான வாயு, வாயு அப்புவில் கூடில் அபான வாயு, வாயு பிருதிவியில் கூடில் பிராண வாயு.

## இவை ஐந்தும் வாயு பஞ்சீகரணம்

அக்கினி ஆகாயத்தில் கூடில் சோத்திரம் (காது). அக்கினி வாயுவில் கூடில் தொக்கு(தோல்) அக்கினி அம்சமே சக்ஷீ(கண்).

அக்கினி அப்புவில் கூடில் சிங்நுவை (நாக்கு), அக்கினி பிருதிவி யில் கூடில் ஆக்கிராணம் (மூக்கு)

## இவை ஐந்தும் அக்கினி பஞ்சீகரணம்

அப்பு ஆகாயத்தில் கூடில் சத்தம், அப்பு வாயுவில் கூடில் பரிசம், அப்பு அக்கினியில் கூடில் ருபு, அப்புவின் அம்சமே ரசம், அப்பு பிருதிவியில் கூடில் கந்தம்.

## இவை ஐந்தும் அப்புவின் பஞ்சீகரணம்.

பிருதிவி ஆகாயத்தில் கூடில் வாக்கு, பிருதிவி வாயுவில் கூடில் பாணி (கை), பிருதிவி அக்கினியில் கூடில் பாதம் (கால்) பிருதிவி அப்புவில்கூடில் குய்யம், பிருதிவியின் அம்சமே பாயுரு

(குய்யம்-பால் உறுப்பு, பாயுரு=எருவாய்)

## இவை ஐந்தும் பிருதிவி பஞ்சீகரணம்.

இப்படிப் பஞ்சீகரிக்கையால் பிருதிவியில் கன்மேந்திரியங்கள் ஐந்தும், வாயுவில் விடயங்கள் ஐந்தும், அக்கினியில் ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாயுவில் வாயுக்கள் ஐந்தும், ஆகாயத்தில் கரணங்கள் ஐந்தும் ஆக 25தத்துவங்களாயின. இவைகளின் கூட்டமே தேகம்."

(வி.த'பி,சிவோதயம் செய்261 உரை)

55, ஆணவத்தான் மூடனாம் ஆருயிர்க்கு முன்வினையான்
மாண அளிக்கும் இறை மாயைவடிவு என்றானோ.

பொருள் ;

ஆணவத்தான்-ஆணவ மலத்தால், மூடனாம் ஆருயிர்க்கு-அறிவற்றவனாகும் அரிய உயிர்க்கு, முன் வினையான்-முற்

பிறப்பிற்செய்த நல்வினை தீவினைகளின் பயனால், இறை மாயை வடிவு மாண அளிக்கும் என்றானோ-சிவபெருமான் மாயாகாரியமாகிய உடலைப் பெருமையுற அளிக்கும் என்றருளி யவனோ.

விளக்கம் :

வீடுபேறடைதற்குரிய அரியவுயிர் "ஆணவத்தான் மூடனாம்" என்று இரங்கிக் கூறுவது போலமைந்துள்ளது இத் தொடர்.

"என்றும் அஞ் ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே"

(சிவ-சித்,பிரமாண செய் 80)

என்றபடி ஆணவமலம் உயிர்க்கு அஞ்ஞானத்தையுண்டுபண்ணும் தன்மைத்தாலின்" ஆணவத்தான் மூடனாம் ஆருயிர்" எனப்பட்டது.

"செப்பரும் ஆருயிர் வருக்கம் அளப்பரிதாம் என்றும்
செறிதரும் ஆணவ இருளாய் அனாதி மறைப்புளதாய்த்

தப்பரிய இருவினையின் துய்ப்பதனுக் கிசைந்த
தனுவாதிவித மாயைதர அவற்றைப் பொருந்தி

அப்பரிசே யுயர்திணையோ டஃறிணையாய் விரிந்தே
அருநிரயஞ் சுவர்க்கநில மிசையிதமோ டகிதம்

எய்ப்புறநின் றருந்தி யலமரும் இறைவன் அருளால்
இருவினையொத் திடில்அரிய பரபதமுற் றிடுமே."

(சிவ-தீபம்.பொது.செய்.33)

(இதம் அகிதம்-நன்மை தீமை. நிரயம்-நரகம். அலமரும்-சுழலும் )

"நிரஞ்சன மாய ஆன்மா நிறைந்தவன் எங்குமேனும்
வருஞ்செயல் உடலிலாதான் ஆயினு மாயை தந்த
புரஞ்செறி பவனாய் நின்று புகலரும் பவங்கள் தோறும்
திரிந்திடும் என்று கூறும் சிவனருள் ஆகமங்கள்"

(சித்.சிகா, சீவான்மத்தலம் செய்5)

(புரம்-உடல். நிரஞ்சனம்-உடலில்லாதவன். நிறைந்தவன்-வியாபகன். பவம்-பிறப்பு.)

சதாசிவப் பிர்மத்தின் இதயத்தினின்று தோன்றிய உயிர், இருபத்தைந்து தத்துவக் கூட்டங்களாலான உடலைப் பெறுமென்பதும் அவ்வுடல் முற்பிறப்பிற் செய்த வினைகளுக்கேற்ப இறைவனால் அளிக்கப்பெறுமென்பதும் 53, 54, 55 கண்ணிகளால் உரைக்கப்பெற்றன.

56. மேலைவினை யாலுழலு மெய்யுயிர்க்குப் பாகமலக்
காலமுறச் சுத்தக் கரணமாம் என்றனனே.

(பொருள்)

மேலை வினையால் உழலும் மெய் உயிர்க்கு — முற்பிறப்பில் ஈட்டிய சஞ்சித வினையால் (இறப்பு பிறப்புகளில் கறங்குபோல்) உழலாநின்ற உயிர்க்கு, பாகமலக் காலமுற — மலபரிபாகம் அடையுங் காலம் உண்டாக, கரணம்சுத்தமாம் என்றனனே — மனம் புனிதமடையும் என்றுரைத்தவனே.

விளக்கம் ;

மலபாகம் என்பது பாகமலம் எனச் சொல் நிலை மாறிற்று. மலபாகம்-மல பரி பாகம். மலம்-ஆணவ மலம், பாகம்-திரிவு படுதல். பாசம் தனது தன்மை நீங்கிப் பக்குமடைதல். பரி என்பதோ ரிடைச் சொல். கரணம் — அந்தக்கரணம். இங்கு

மனத்தைக் குறிக்கும். மனம் சுத்த மடைதலாவது அவா அற்றிருத்தல். சுத்தக் கரணமா மென்பதில் கரணம் சுத்தமாம் எனவிகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. சஞ்சிதம் அநுபவியாமல் எஞ்சி நிற்கும் வினை.

57. கூறுமனச் சுத்தமுறக் கொண்டுபிண்ட நாமத்தை
நூறுதல நெறியு நோக்குமெனச் சொன்னானோ.

பொருள் :

கூறு மனச் சுத்தமுற-சொல்லப்பெறும் மனம் புனிதமடைய. (அங்ஙனம் பெற்ற புருடன்) பிண்ட நாமத்தைக் கொண்டு-பிண்டம் என்னும் பெயரைப் பெற்று, நூறு தல நெறியும் நோக்குமெனச் சொன்னானோ-மேல் அநுசரிக்கத்தக்க நூறு தலங்களுக்குரிய நெறிகளையும் கருதுவான் என்றுரைத் தவனோ.

விளக்கம் :

வீரசைவ சித்தாந்த நூல்களில் நூற்றொரு தலங்கள் சொல்லப் பெற்றுள்ளன. அங்கத் தலம் 44. இலிங்கத் தலம் 57=101. அங்கத் தலத்துள் முதலாவதாகவுள்ளது பிண்டத் தலம். பிண்டத் தலத்தையடைந்த புருடனே மற்றுள்ள தலங்களை முறையே அடைதற்குரியவனாவன். ஆதலின், பிண்டப் பெயரைப் பெற்றவன் "நூறு தல நெறியும் நோக்கும்" என்றார்.

"பண்டொ ராயிரம் பிறவியிற் பயின்றபுண் ணியத்தால்
மண்டு தீவினைப் பரப்பறப் புண்ணியமா மனத்தைக்
கொண்ட தேகியே கடல்குடித் துயர்குறு முனிவ !
பிண்ட நாமுற் றிடுமென அறைகுவர் பெரியோர்."

(சித். சிகா. பிண்டத். செய். 1)

"அந்தக் கரண சுத்தியினால் அடைவன் பிண்டப் பெயரன்றே"

(பிரபு-மனோ-செய் 12)

என்பன அறிக

## 58. கிரியை மனபாவம் கிடைப்பரிய ஞானம் மருவிவிடா(து) அங்கம் வயங்குமெனச் சொன்னானோ.

பொருள் :

அங்கம்-தியாகாங்கம் முதலிய மூன்று அங்கங்கள், கிரியை மனபாவம் கிடைப்பரிய ஞானம்-முறையே கிரியா பத்தியையும் மனத்துண்டாகும் பாவ பத்தியையும் கிடைத்தற்கரிய ஞான பத்தியையும், மருவி விடாது வயங்கும் எனச் சொன்னானோ-பொருந்தி விடாமல் விளங்குமென்றுரைத்தவனோ.

விளக்கம் ;

தியாகாங்கம் முதலிய மூன்று அங்கமும் ஒன்றானதே பத்திப் பிண்டம். இந்தப் பத்திப் பிண்ட சம்பந்தமான சிவாத்துவித பத்தியே விருத்தியினால் தியாகாங்கத்தில் கிரியாபத்தியும் போகாங்கத்தில் பாவபத்தியும் யோகாங்கத்தில் ஞானபத்தியுமாய்ப் பொருந்தும்.

ஸ்வய லீலானந்த பத்தியே கிரியாபத்தி. பரிபூரண பத்தியே பாவபத்தி. நிரஞ்சன பத்தியே ஞானபத்தி.

1. கிரியாபத்தி பத்தன் அங்கத்தில் 1. சத்பத்தியாய் விளங்கும்

2. கிரியாபத்தி மகேசுரன் அங்கத்தில் 2. நயிட்டிக பத்தியாய் விளங்கும்

3. பாவபத்தி பிரசாதி அங்கத்தில் 3. அவதான பத்தியாய் விளங்கும்

4 பாவபத்தி பிராணலிங்கி அங்கத்தில் 4. அநுபவ பத்தியாய் விளங்கும்

5. ஞானபத்தி சரணன் அங்கத்தில் 5. ஆனந்த பத்தியாய் விளங்கும்

6. ஞானபத்தி ஐக்யன் அங்கத்தில் 6. சமரச பத்தியாய் விளங்கும்.

## இவற்றைக் கீழ்வரும் சான்றுகள் விளக்கும்.

''இயம்புறும் அயிக்கனாதி தலங்களோர் இரண்டொன் றாகி
நயம்பெறு யோகாங்காதி மூவங்க மாகி நண்ணும்
சயங்கொளிம் மூன்றொன்றாகும் தன்மையே **பத்திப் பிண்டம்**
பயன்றரல் இதனிற் சேர்ந்த **பத்தியு மூன்றா** மன்றே.''

''யோகாங்கந் தன்னின் **ஞான பத்தி**யா யுற்று நிற்கும்
போகாங்கந் தன்னிற் **பாவ பத்தியா**ய்ப் பொருந்து மற்றை
யேகாந்தமாந் தியாகாங்கத் தெய்திடுங் **கிரியை** யாகி
மோகாந்தங் கண்டமிக்கோர் மொழிகுவர் இந்த வாறே.''

''மூன்றுவொவ் வொன்றிரண்டாய் மூவிரண் டங்கத்தெய்து
மூன்றிவை யொவ்வொன்றா றா யுற்றிடும் ஆறாறா றங்கத்(து)
ஆன்றவா றாறுமொன்ற அருஞ்**சிவாத் துவித பத்தி**
சான்றதாம் இலிங்காங்கா சரணையாற் பலவாய்ச் சாரும்.''
1வீ.த.பி பத்திப்பிண்ட.செய்.14,15,16)

## பத்திகளின் முறை.

''பரமாத்மன் தன்னுடைய பரம சைதன்னிய ரூபமான பரமசிவனும் தானும். நீரும் நீரும், பாலும் பாலும், நெய்யும் நெய்யும், நெருப்பும் நெருப்பும்போல ஏகமென்றறியும் சமரச ஞானமே **சமரச பத்தி**. அதில் ஆனந்தமே **ஆனந்த**

**பத்தி.** அதன் அனுபவமே **அனுபவ பத்தி.** அதன் அவதானமே **அவதான பத்தி.** அதன் நிஷ்டையே **நிஷ்டா பத்தி.** அதன் சிரத்தையே **சற்பத்தி**யாகும். இந்தச் சற்பத்தியே நிஷ்டையாக சமரச பத்தியந்தமான பஞ்சவித பத்திகளையுட்கொண்டு அந்தக் கனலிங்கத்தின் அர்ச்சனை - அர்ப்பணம்-தியாநம-அனுபவம் சற்பாவர்தி கிரியாகாரத்தில் விளங்குகையினால் ஸ்வய லீலானந்த பத்தி யெனப்படும்.''

(வீ.த.பி, இலிங்காங்க செய் 17.18.19,உரை)

**பத்தி-சொற்பொருள்.**

"பகாரமே பரஞான சித்து. திகாரமே பரசிவ தத்துவம்.
இந்த ஞானோதயத்தின் அயிக்கியமே பத்தி."

(வீ த.பி.செய் 473 உரை.)

**59. ஞாதிருவு நின்றறியு ஞானஞே யங்களுமற்று
ஏதமற என்றும் இருந்தபடி வைப்பானோ.**

பொருள் .

ஞாதிருவும்-(உயிரும் சிவமும் பிரிப்பின்றி ஒன்றாயிருப்ப தால்) காண்பானும், நின்று அறியும் ஞான ஞேயங்களும் அற்று-ஒன்றைப் பற்றியறியும் காட்சியும் காட்சிப் பொருளும் ஆகியவை தோன்றாமல், ஏதம் அற என்றும் இருந்தபடி வைப்பானோ-இறத்தல் பிறத்தலாகிய துன்பங்கள் நீங்க எக் காலத்தும் ஒரு தன்மைத்தாய பேரின்ப நிலையில் இருக்க அருள் புரிபவனோ

விளக்கம் :

ஞாதிரு-காண்பான், அறிபவன். ஞானம்-காட்சி, அறிவு. ஞேயம்-காட்சிப் பொருள், அறியப்படு பொருள். ஈண்டு காட்சிப் பொருளாவது பிரமம்

ஞாதிரு—ஞானம்-ஞேயம் ஆகிய இவற்றைத் திரிபுடி என்ப. "திரிபுடிகள், முந்துஞா திருஞான ஞேயமாம்" என்னும் வேதாந்த சூளாமணி. (செய்.78)

ஒருவன் ஒரு கடத்தைக் காணின் அவன் காண்பவன் (ஞாதிரு) ஆகின்றான். அவனால் காணப்பட்ட பொருள் கடம் (ஞேயம்) ஆகிறது. அதனைக் கடம் எனக் காணுதல் அவனது காட்சி (ஞானம்) ஆகும். இம்மூன்றும் வெவ்வேறு பொருள் கள். ஆனால் உயிர் சிவத்துடன் ஒன்றுபட்டு நிற்கும் முத்தி நிலையில் காண்பானும் அவனது காட்சியும் அவனால் காணப் படும் பொருளும் சிவமேயாம். இம்மூன்றன் தன்மை தோன்றாது ஏகமாய் நிற்கும் நிலை ஐக்ய முத்தியாம். இவை பல ாய் நிற்குமாயின் மாயையின் விகற்பத்தால் வந்த உலகமே தோன்றும்.

இதனை,

"ஞேய ஞானஞா திருவெனும் இவைபல்நிற்கு
மாயின் வேறறு முத்தியன்று, அதுசக மாமென்(று)
ஏயு மாறிது அதுவெனுஞ் சுட்டிலா இயல்பை
மாயை மாறிய தேவிபால் அருளினன் வள்ளல்,"
(பிரபு-கதலி-செய்.13)

என்பது உணர்த்தும்.

இதனை வீரசைவ சடுத்தல சித்தாந்த நூல்கள் நூற்றொரு தலங்களுள் எழுபத்தேழாவது தலமாகிய நஷ்டாகமத்தலம் என்று நுவலும். அஃதாவது சிவயோகியின் மகா ஞானத்தில் ஞாதிரு ஞான ஞேயங்களாகிய திரிபுடியின்மையால் பேத ஞானம் நசிக்கின்றமையால் நஷ்டா கமம் என்று சொல்லப் படும்.
இதனை,

"பேதமி லாத மாபோத கத்தினிற் பிரிந்து நின்ற
ஞாதுரு வாதி யிங்கு நண்ணலான் ஞானத்தின்கண்

போதுரு நட்ட பாவம் புகல்வர் நட்டாகமந்தான்
தீதறு கலைகள் முற்றுந் திருந்துறக் கற்ற மேலோர்.''
(சித்-சிகா-நட்டாகம-செய்.1)

(பேதம்-வேற்றுமை-போதம்-ஞானம்)
என்பதாலறிக.

''மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத இன்பமதென் சொல்.'';
(திருவருட்பயன்-79)

(மூன்றாய தன்மை-காண்பான், காட்சி, காணப்படும் பொருள். அவர் தம்மின் கூடுங்கால் மூன்றாய தன்மை தோன்றாது. அப்பொழுது நிகழும் பேரின்பத்தை எவ்வாறு சொல்ல இயலும், முடியாது)

''அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே-அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்.''
(அற்புத-செய் 2)

என்பனவுங் காண்க.

60. வானேத்த என்று மருவற் கரியபதம்
நானேத்த நல்குசிவ ஞானகுரு தேசிகனோ.

பொருள் ;

வான் ஏத்த-தேவர்கள் சிவபெருமானைத் துதிக்க, என்றும் மருவற்கு அரிய பதம்-அவர்கள் எக்காலத்தும் அடைதற்கரிய சிவபதத்தை, நான் ஏத்த நல்கு சிவஞானகுரு தேசிகனோ-

அடியேன் இறைஞ்ச அளிக்கின்ற சிவஞான குருவாகவுள்ள தேசிகனோ.

விளக்கம் :

தேவர்களாயினோர் விண்ணுலக இன்பத்தைத் துய்த்த பின்னர் மீண்டும் பிறத்தற்குரியர், அவர்கள் வாரா நெறியாகிய சிவபதவியைப் பெறாதவராவர். நில்வுலகில் மானுட உடலம் பெற்றுப் பிறந்து ஞானாசிரியனை யணுகி அவர் உபதேசித்த நெறியிலொழுகிச் சிவயோகம் புரிந்தவரே சிவபதவியை யடைவர். இக் கருத்தை,

"போகபூ மியினிற் போக தனுவினாற் பெருந்த லாகா
ஏகமாம் இன்ப சித்தி யியம்புறிற் கரும பூமி
ஆகமா னதுகொண் டன்றி, ஆதலான் ஞாலத் தெய்தி
யோகமா நெறியில் நின்றோர் உண்மை சாதித்துக்
கொள்வர் "
(பிரபு-கைலாய கதி-செய்.53)

(போக பூமி-தேவவுலகம். கருமபூமி-நிலவுலகம். ஆகம்-உடம்பு. யோகமா நெறி-சிவயோகமாகிய மார்க்கம். உண்மை-தத்துவ ஞானம். சாதித்துக் கொள்வர்-நிறைவேற்றிக் கொள்வர்.) என்னும் பாடல் அறிவிக்கும்,

இவ்வாற்றால் சிவபதம் "வானேத்த என்று மருவற்கரிய பதம்" என்றார்,

## குரு மூவகைப்படுவர்.

அவர்கள் சிக்ஷாகுரு-தீக்ஷாகுரு-ஞானகுரு. சிக்ஷாகுரு மெய்ந் நூற் பொருள்களைக் கற்பிப்பவர். தீக்ஷாகுரு தீக்ஷை செய்விப் பவர். ஞான குரு ஞானம் பெறச் செய்பவர். ஒருவரே மூவகைக் குருவாகவும் இருத்தல் கூடும். ஆசிரியர், தமக்குச்

சிவஞானி ஞானகுருவாதலின் "சிவஞான குரு தேசிகனோ" எனப் போற்றிக் கூறுகின்றார்.

"வானேத்த...மருவற் கரியபதம்" என்றதால் சிவபதவியின் உயர்வும்,

"நானேத்த...தேசிகனோ" என்றதால் சிவஞானியின் உயர்வும் தோன்றும்.

வான்-ஆகுபெயர்.

61. மிடியற் கெளிது விழியுற்ற பொன்போல்
அடியற்கு வந்துஇங்கு அகப்பட்ட ஆரமுதோ.

பொருள்.

மிடியற்கு எளிது விழியுற்ற பொன்போல்-வறுமையுற்ற ஒருவனுக்கு எளிதாக அவன் கண்காணக் கிடைக்கப்பெற்ற பொன்னைப்போல, அடியற்கு இங்கு வந்து அகப்பட்ட ஆரமுதோ-அடியேனுக்கு இவ்வுலகில் எழுந்தருளி என்கண் காணக் கிடைக்கப்பெற்ற அரிய அமுதமோ,

விளக்கம் :

ஒரு வறுமையாளன் பொன் தேட வேண்டுமென்ற முயற்சியிலனாயிருப்பவும் அவன் தேடியல்லலுறாமல் அவன் கண் காணப் பொன் கிடைத்தால் அஃது எத்தகு வியப்பிற்கும் மகிழ்ச்சிக்கும் உரியதாமோ அவ்வாறு பக்குவமில்லாத அடியேன் வனத்திலும் குகையிலும் தேடி அல்லலுறாமல் ஞானாசிரியனை எளிதில் இங்குப் பெற்றேன் என உவகைச் சுவை தோன்ற ஆசிரியர் கூறுகின்றார்.

உளத்திற்கு இன்பம் நல்கி உயிர்க்குச் சிவாநந்தத்தை அளித்தலால் "ஆரமுதோ" என்றும், அன்பினால் தளை செய்யப்பட்டமையால் "அகப்பட்ட" என்றுங் கூறினார்.

மிடியனைத் தனக்கும் பொன்னை ஞானாசிரியனுக்கும் உவமைப் படுத்தலால் இஃது உவமையணி.

62. கயிலை மலைமேவுங் கடைப்பிடியால் சீர்சால்
மயிலமலை மீதிங்கு வந்தமர்ந்த மாமணியோ.

பொருள் ;

கயிலை மலை மேவும் கடைப் பிடியால்-கயிலை மலையைத் தனக்குரிய இடமாகக் கொண்டு விரும்பியுறையும் உறுதிப் பாட்டினால், இங்கு வந்து சீர்சால் மயில மலை மீது அமர்ந்த மாமணியோ-இவ்வுலகில் சிவஞானியாக வந்து சிறப்புமிக்க மயிலமலைமேல் வீற்றிருக்கின்ற பெருமை பொருந்திய இரத்தினமோ.

விளக்கம் :

சிவபெருமான் கயிலமலையில் வீற்றிருத்தலையே உறுதியாகக் கொண்டவர். அப்பெருமான் சிவஞானியாக உலகில் தோன்றிய காலத்தும் அவ்வுறுதிப்பாட்டினின்றும் வழுவாமல் கயிலையையொத்த சிறப்புமிக்க மயிலமலையில் அமர்ந்துள்ளார் என்றபடி.

கடைப்பிடித்தல்-உறுதியாகக் கொண்டொழுகல். ''நன்மை கடைப்பிடி'' என்பது ஆத்திசூடி. இதில் அப்பொருட்டாதல் காண்க.

ஆசிரியர்,

''கயிலைமலை மீதிருந்த காட்சிபோல் வந்து
மயிலமலை மீதிருக்கும் வள்ளல்'',

(சிவ-நெ தூது,19.)

என்றுரைத்திருத்தலும் அறிக.

63. எல்லாக் கலையுணர்ந்தும் எய்தாப் பொருளையொரு
சொல்லால் திகழ்த்துதற்குத் தோன்றும் பெருமானோ.

பொருள் :

எல்லாக் கலையுணர்ந்தும்-கலைகள் யாவற்றையுங் கற்று உணர்ந்தும், எய்தாப் பொருளை-அறிய முடியாத சிவபரம் பொருளை, ஒரு சொல்லால்-தத்துவமசி யென்னும் ஒரு மொழியால், திகழ்த்துதற்குத் தோன்றும் பெருமானோ-விளக்குதற்கு ஞானசிரியனாக எழுந்தருளும் பெருமானோ.

விளக்கம் :

ஒரு சொல் என்பது தத்துவமசி மகா வாக்கியம். இதன் விளக்கம் கண்ணி 47இல் கூறப்பட்டது.

ஞானம், பரஞானம்-அபரஞானம் என இரண்டாம். அபர ஞானம் சாத்திரங்களைக் கற்றறிவதால் வரும் ஞானம். இதனால் சிவாநுபவம் உண்டாகாது. பரஞானம் மேலான ஞானம். அது பதிஞானம் எனப்படும். அந்த ஞானம் குருவின் உபதேச மொழிகளால் உண்டாம். ஆதலின் ''எல்லாக் கலையுணர்ந்தும்...பெருமானோ'' என்றார். ''ஒரு சொல்லால்'' என்பதன் நயங் காண்க. ''நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க''

(திருவாசகம். திருஅண்டப் பகுதி 49)

என்னுங் கருத்து ஈண்டொப்பிடத்தக்கது.

64. சீலந் திகழ்த்துமதிச் சின்னமின்றி யும்படியோர்
கோலஞ் சிவமெனவுட் கொள்ளும் அருட்குன்றமோ.

பொருள் :

சீலம் திகழ்த்தும் மதிச்சின்னம் இன்றியும்-சிவபெருமானுடைய இயல்பை விளக்கும் ஒரு கலைச் சந்திரனாகிய அடை

யாளம் இல்லாமலிருந்தும், படியோர்-உலகினர், கோலம் சிவமென உட்கொள்ளும்-சிவஞானி கொண்டுள்ள இத்திருக் கோலம் சிவபெருமான் கொண்டதொரு கோலமேயெனக் கண்டோர் கருதும் கருணைக்குன்றமோ.

விளக்கம் :

சிவபெருமான் திருமுடியில் அணிந்திருப்பது ஒரு கலைச் சந்திரன். இதனை "கலைச்சிறு திங்கள் மிலைத்த சிற்றம் பலவன்" (திருக்கோவையார். செய்.25)
என்பதற்கு "ஒரு கலையாகிய சிறிய பிறையைச் சூடிய சிற்றம் பலவன்" எனப் பேராசிரியர் கூறும் உரையுணர்த்தும் இம்மதி யின் கலை ஒன்றிற்குமேல் வளர்தலும் தேய்தலுமின்றி என்றும் ஒரு பெற்றித்தாயுள்ளது. "குறைவு நிறைவுமின்றிச் சூடும் பிறையர்." (திரு-வெங்.செய்.276)
என்பர் ஆசிரியர். அது சிவபெருமான் என்றும் ஒரு தன்மையர் என்பதை அறிவிக்கும் அறிகுறியாகவுள்ளது. ஆகலின், "சீலந் திகழ்த்து மதிச்சின்னம்" என்றார். சிவபெருமான் என்றறி வித்தற்குரிய அறிகுறியாகவுள்ளவற்றுள் ஒன்றாகிய மதிச் சின்னம் இல்லாமலிருந்தும் உலகினர் சிவஞானியின் திருக் கோலத்தைக் கண்டு இது சிவபெருமான் திருக்கோலமே என்று உளத்தில் துணிகின்றனராய். அதற்கு ஏது அவரது அருள் என்பார் "அருட்குன்றமே" என்றார்.

## 65. மண்களிக்க நாயேன் மனங்களிக்கக் கண்டுகொண்டு கண்களிக்க வந்த கருணைப் பெருங்கடலோ.

பொருள் :

மண்களிக்க-உலகினர் மகிழ்ச்சியுறவும், நாயேன் மனம் களிக்க-நாயனைய கீழோனாகிய எனது மனம் களிப்புறவும், கண் கண்டு கொண்டு களிக்க-என் கண்கள் நோக்கி

அத்திருவுருவைத் தம்பாற்கொண்டு களிப்புறவும், வந்த கருணைப் பெருங்கடலோ-தோன்றிய அருட்பெருங்கடலோ.

விளக்கம் ;

உலகினர் சிவஞானியைத் தரிசிக்கும் பேறு பெற்றதை யுன்னி மகிழ்ச்சியுறலால் "மண் களிக்க" என்றும், உணர்த்திய உபதேசத்தால் தம் உளம் களிப்புறலால் "மனங்களிக்க" என்றும், சிவஞானியின் திருமேனிப் பொலிவைத் தம் கண்கள் கண்டு இன்புறலால் "கண் களிக்க" என்றுங் கூறினர்.

களிக்க என்னும் எச்சங்களின் ஈற்றில் உம்மைகள் தொக்கன. மண்-ஆகு பெயர்.

## 66. சம்பந்தன் அன்றொருநாள் தானுண்ட பால்நாளும் எம்பந்த நீங்க இனிதமுது செய்தானோ.

பொருள் :

சம்பந்தன் அன்று ஒருநாள்தான்-திருஞான சம்பந்தப் பெருமான் முற்காலத்தில் ஒரு நாளே உண்ட பால்-அருந்திய ஞானப்பாலை, நாளும்-ஒவ்வொரு நாளும், எம்பந்தம் நீங்க-அடியவர்களாகிய எங்களது மும்மலத் தொடர்பு நீங்க, இனிது அமுது செய்தானோ-இனிதாக அருந்தியவனோ.

விளக்கம் :

சீகாழிப் பதியில் அவதரித்த திருஞான சம்பந்தப் பெருமான் பிரம தீர்த்தக் கரையில் உமாதேவியார் பொற்கிண்ணத்தில் அளித்த ஞானப்பாலை அருந்தினார். அப்பெருமான் ஞானப் பாலை அருந்தியது ஒருநாள் மட்டுமேயாம். சிவஞான பாலைய தேசிகர்க்கு முருகப் பெருமான் சந்நியாசாச்சிரமம்

தந்து ஆசார்யாபிஷேகமும் ஞானோபதேசமும் புரிந்து, தமது அம்சத்தில் ஓரம்சம் அவரிடத்தில் பதியும்படி செய்து, "நீ பாலை யுணவாகக் கொண்டு சிஷ்ய பரம்பரையோடு சிவஞான பாலைய தேசிகனென வாழ்வாயாக" என்று அருள் புரிந்தார். அங்ஙனம் முருகப் பெருமான் அருளிய ஆணையின்வண்ணம் அருந்தும் பாலாதலின் அது ஞானப் பாலாயிற்று. அப்பாலை யருந்தும் தேசிகர் அருளும் உபதேசத்தால் அடியவர்தம் மும் மலத் தொடர்பு நீங்கப்பெறுதலான் "எம்பந்தம் நீங்க இனித முது செய்தானோ" என்றார். "புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாற்போல" அடியவர்தம் பந்தம் நீங்கத்தான் பால் அமுது செய்தார் என்றபடி.

முருகப் பெருமான் அருளியவாறு பாலை உணவாகக் கொண்டதால் பாலையன்-சிவஞான பாலைய தேசிகர் எனப் பெயர்கள் வழங்கலாயின, இதனை இந்நூலாசிரியர்
"பாலுண்டு பாலையன் என்றிருந்தாய் கொலெம்
பாலையனே."
(சிவ-கலம்,செல்.27)

என்று கூறியுள்ளதாலறிக.
மற்றும், ஆசிரியர்.

"முன்னாளில் ஒரு ஞான முளையயின்ற ஆரமுதம்
எந்நாளும் உண்கின்ற யாரேநின் னளவறிவார்."

(ஞான முளை-திருஞான சம்பந்தர்.) (சிவ.கலம்.செய்.1)

என்றுரைத்திருத்தலு மறிக.
அமுது செய்தல்-அருந்துதல். ஒரு சொன்னீர்மைத்து.

**67. வேண்டுவஎல் லாமுமாம் வெண்ணீ றளிப்பதற்குத்
தீண்டு மலர்க்கைச் சிவஞான தேசிகனோ.**

பொருள் :

வேண்டுவ எல்லாமும் ஆம்-அன்பர்கள் விரும்புவன யாவற்றையும் நல்கும், வெண்ணீறு அளிப்பதற்கு-வெண்ணிறத்த திருநீற்றினை அளிப்பதற்கு, தீண்டு மலர்க்கைச் சிவஞான தேசிகனோ-தம் திருநீற்றினைத் தொடுகின்ற மலர்போலுங் கையினையுடைய சிவஞான தேசிகனோ.

விளக்கம் ;

வேண்டுவ-வேண்டுவன. அவை உலக இன்பங் கருதுவார் விழையும் அறம்-பொருள்-இன்பங்களையும், அவற்றின் நிலையாமையுணர்ந்த துறவினோர் விரும்பும் வீடுபேறுமாம்.
இதனைக் கீழ்வருவன விளக்கும்.

"இளைக்கு மிடியற் குறுபொருளாம்,
இறைவற் கரசாம், கூற்றுவனை
விளிக்கும் பிணிக்கு மருந்தாகும்,
விடத்திற் கருஞ்சீர்க் கலுழனாம்,
வளைக்கும் பகைக்குப் படையாகும்,
மலடர்க் கரிய மகவாகும்,
திளைக்குங் கருணைச் சிவஞான
தேவன் திருக்கைத் திருநீறே."

(சிவ-கலம் செய் 44)

(மிடியற்கு-வறுமையுடையவனுக்கு. கூற்றுவன்-யமன். கலுழன்-கருடன்.)

"கொண்ட வெம்பவம் நீறுபட, நீறுதன்னைக் கொடுப்பது."
(வெம்பவம்-கொடிய பிறப்பு. (சிவ பிள்-சப்பாணி 2)

நீறுபட-அழிய.) எல்லாமும் உம்மை முற்றும்மை.
இதனால் சிவஞானியின் திருக்கைத் திருநீற்றுப் பெருமை உணர்த்தப்பெற்றது.

68 இம்மை மறுமை யிரண்டும் பெற வமக்குச்
செம்மைதர வந்த சிவஞான தேசிகனோ

பொருள் :

இம்மை மறுமை இரண்டும் பெற-இம்மையின்பம் மறுமையின்பம் ஆகிய இரண்டின்பங்களையும் விரும்புவார் பெறவும், எமக்குச் செம்மை தர வந்த சிவஞான தேசிகனோ-அடியேங்கட்குச் சிவபதவியைத் தரவும் தோன்றிய சிவஞான தேசிகனோ-அடியேங்கட்குச் சிவபதவியைத் தரவும் தோன்றிய சிவஞான தேசிகனோ.

விளக்கம் :

இம்மையின்பமாவது இவ்வுலகில் இப்பிறப்பில் அடையும் இன்பம். மறுமை யின்பமாவது வரும் பிறப்பில் அடையும் இன்பம். செம்மை சிவபதம் இப்பொருட்டாதலைச் "செம்மையேயாய சிவபதம் அளித்த செல்வமே சிவபெருமானே." (திருவாசகம்.பிடித்த பத்து செய்.3) என்னும் மணிவாசகப் பெருமான் அருள் வாக்காலறிக இம்மை மறுமை யின்பங்கள் நிலையற்றனவாதலின் "இரண்டு" என்ப் பிரித்தும் தாமும் தம்போல்வாரும் தூய துறவறநெறியினின்று நிலைத்த வீட்டின்பங் காணும் நிலையினராதலின் "எமக்குச் செம்மை தரவந்த" என்றுங் கூறினார்.

பெற, தர என்னுமெச்சங்களின் ஈற்றில் உம்மைகள் தொக்கன

இதனால், சிவஞானி அன்பர்களுக்கு இருமையின்பங்களை யும் அடியவர்க்குச் சிவபதவியையும் அளிக்கும் அருளாளர் என்பது உணர்த்தப்பட்டது.

69. அரசமய மன்றி அகங்களித்தெஞ் ஞான்றும்
பரசமய மும்பணியும் பங்கயப்பொற் றாளானோ.

பொருள் :

அரசமயம் அன்றி-சிவ சமயத்தினர் மட்டும் அல்லாமல், அகங்களித்து-உளமகிழ்வுற்று, எஞ்ஞான்றும்- எக்காலத்தும், பரசமயமும் பணியும் பங்கயப் பொன் தாளானோ-பிற சமயத் தினரும் வணங்கும் தாமரை மலர்போலும் அழகிய திருவடியை யுடையவனோ.

விளக்கம் :

அரன் சமயம்-அரசமயம் என்றாயிற்று. அரன்-சிவபெரு மான். சமயம் இரண்டும் சமயத்தினரைக் குறித்தலின் ஆகு பெயர்கள். பரசமயமும் - உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

''மழுவேறு கையான் வரினும் நீறெள்ளும், கழுவேறிகளும் தான் காலான்'' (சிவ-நெ.தூது 16) என்று ஆசிரியர் கூறுதல் காண்க.

(கழுவேறிகள்-சமண சமயத்தினர்)

இதனால் சிவஞானி எச்சமயத்தவரும் போற்றும் திருவடிப் பெருமையுடையரென்பது அறிவிக்கப்பட்டது.

70. தானபங்க னென்னுமதன் தன்னாணை யைக்கடந்து
மானபங்கம் பண்ணும் வலியொன் றுடையானோ.

பொருள் :

தானபங்கன் என்னு மதன்தன்-உயிர் இருத்தற்கிடமாகிய உடல் அழிவுற்றவன் என்று சொல்லப்பெறும் மன்மதனது, ஆணையைக் கடந்து-ஆளும் அதிகாரத்திற்கு உட்படாமல், மானபங்கம் பண்ணும் வலியொன்று உடையானோ-அவனது பெருமையை அழிக்கும் ஒப்பற்ற தவவன்மையுடையவனோ.

விளக்கம் :

ஆணை-ஆளும் அதிகாரம், வெற்றி என்ற பொருளுமாம். மன்மதன் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணால் உடல் அழிவுற்று அநங்கன் என்னும் பெயரைப் பெற்றானாதலின் அவனைத் ''தானபங்கன்'' என ஆசிரியர் குறிப்பால் உணர்த்தினார். (அநங்கன் — அந்+அங்கன், உடலில்லாதவன்.) மன்மதனது ஆணையாவது உயிர் வருக்கங்களைத் தன் கணையால் காம வேட்கையுறச் செய்தலால் உண்டாகும் வெற்றி. அவனது ஆற்றல் சிவஞானிபால் செல்லாது. அவனது பெருமை இழுக்குற்றதால் ''மானபங்கம் பண்ணும் வலியொன்றுடையானோ'' என்றார். வலி, புலன்களையடக்கி யாளும் தவ வன்மை இதனால், சிவஞானியின் ''பொறிவாயில் ஐந்தவித்த'' ஆற்றல் உணர்த்தப்பெற்றது.

71. அறியா தொருநாள் அறையினும்வபன் றாசஞ்
செறியா தருளும் திருப்பே ருடையானோ.

பொருள் :

அறியாது-கூறின் இன்ன பயனுண்டாமென்றறியாமல், ஒரு நாள்-பல நாளன்றி ஒரு நாள், அறையினும்-கூறினாலும், வன்பாசம் செறியாது அருளும் திருப்பேருடையானோ-வலிய

மும்மலத் தொடர்பு அணுகாதவாறு அருள் புரிகின்ற திருப் பெயரையுடையவனோ.

விளக்கம் :

திருநாவுக்கரசருடைய திருப்பெயரை எழுதியும் கூறியும் அப்பூதியடிகள் துன்பில்பதம் பெற்றாரெனத் திருத்தொண்டர் புராணத்தில் நாம் அறிகிறோம். அவ்வாறே சிவஞானியின் திருப்பெயரைக் கூறுவாரும் பாச நீக்கம் பெற்றுப் பேரின்ப வாழ்வு பெறுவர். ஆதலின், "வன்பாசம் செறியா தருளும் திருப் பேருடையானோ" என்றார்.

"தவஞான மில்லாதார் சாற்றினும்வீ டெய்தும்
சிவஞான தேவெனும்பேர்ச் செல்வன்"
(சிவ-நெ தூது.52)

என்று ஆசிரியர் கூறுவர்.

இதனால் சிவஞானியின் திருப்பெயர்ச் சிறப்புக் கூறப் பெற்றது.

72. பூதமுத லெல்லாமும் போக்கியவற் றுள்மறைந்து
ஞாதிருவா மென்னை நயந்தறிவித் திட்டானோ.

பொருள் :

பூத முதல் எல்லாமும் போக்கி-ஐம்பூதம் முதலிய யாவற்றையும் நீ அல்லையென்று நீக்கி, அவற்றுள் மறைந்து-அவற்றுள் மறைந்து(உள்ள),ஞாதிருவாம் என்னை-அறிபவனாகிய என்னை, நயந்து அறிவித்திட்டானோ-விரும்பி அவற்றை யறியும் அறிவே நீ என்று அறிவித்தவனோ.

விளக்கம் :

"உள்ள" என்ற சொல் உறையிற் கொள்ளப்பட்டது.

"பூதமுதல்" என்றதால் தேகம், பொறிகள், அந்தக்

கரணங்கள், புத்தி, பிறவுங் கொள்க. ஐம்பூதம், தேகம் முதலிய ஒவ்வொன்றனையும் ஆன்மா என்று கூறும் சமயவாதிகள் உண்டு. அவர்தங் கொள்கை ஓவ்வாமையான் அவ்வையெல்லாம் நீ அல்லையென்று முறையே ஏதுக்களால் விலக்கி அவற்றையறியும் அறிவே நீ என்று கருணையால் உணர்த்தினரென்பதாம்.

'பூத நீயலை, பொறிகளும் அலை, அலை புந்தி
யேது நீயலை, யிவற்றினை மயங்கியா னென்னும்
போத நீயலை, யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதி யாகிய **பிரமமே நீ**யெனச் சொல்லி.''

(பிரபு-கதலி-செய். 13)

(பூதம்-ஐம்பூதம். பொறி-ஐம்பொறிகள். புஞ்சி-புத்தி ஏதும்-பிறவும். போதர்-இங்கு மயக்க அறிவு.)

''வானம் அல்லேன், வளியல்லேன், அழல்நீர் அல்லேன், மண்ணல்லேன்,
ஞானம் அல்லேன், வினையல்லேன், நானே சிவமென் றெண்ணினேன்
ஊன மில்லா ஒருசிவமே யாவன் இவ்வா றுன்னாதோன்
ஈன மெல்லா முடையவுடம் பெடுத்துச் சுழலு மெஞ்ஞான்றும்''

என்பன ஈண்டறியத் தக்கன.

(பிரபு-மனோலயம். செய். 15)

## அஷ்டாவரணம்

வீடுபேற்றிற்குச் சாதனமாகவுள்ளவையென வீர சைவ சமய நூல்கள் நுவலும் அஷ்டாவரணங்களின் பெருமையைத் தம் ஞானாசிரியராகிய ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் அருளியவாறு ஆசிரியர் ஈண்டு உணர்த்துகின்றார்.

**அஷ்டாவரணம்** = (அஷ்ட + ஆவரணம்) எட்டுக் கோட்டைகள். ஆவரணம்=கோட்டை. அஃதாவது அரசன் தன்னைக் காத்துக் கொள்வதற்குச் சுற்றிலும் கோட்டைகளை அமைத்துக் கொள்கிறான் அவ்வாறு தன்னிடத்துள்ள காமம் முதலிய உட்பகையையும் புறப்பகையாகிய புலன்களின் வேட்கையையும் வென்று உயிர் தன்னைக் காத்துக் கொள்வதற்கு இவை எட்டும் எட்டுக் கோட்டைகள் போலுள்ளன,

அவை : 1) **திருநீறு** 2) **உருத்திராக்கம்** 3) **திரு ஐந்தெழுத்து**. 4) **குரு**. 5. **இலிங்கம்** 6) **சங்கமம்**. 7) **பாதோதகம்**. 8) **பிரசாதம்**.

## 1. திருநீறு

73. எந்தைசிவ சாதனங்கட் கெல்லாம் திருநீறு
முந்தியதென் றுண்மை மொழியும் பெருமானோ.

பொருள் :

எந்தை சிவ சாதனங்கட்கு எல்லாம்-எம் தந்தையாகிய சிவ பெருமானை அடைதற்குரிய சாதனங்களாக உள்ளவை யாவற்றிலும், திருநீறு முந்தியது என்று உண்மை மொழியும் பெருமானோ-திருநீறு முன்னதாக வைத்துச் சொல்லத் தக்கதென்று அம்மெய்ம்மையை உபதேசிக்கும் பெருமானோ.

சாதனம் — முக்கிய காரணம் எம் + தந்தை = எந்தை. மரூஉ மொழி.

''சாதனங்களுள் நீறு முந்திய தென்பர்''
(பிரபு - சித்தராமையர் கதி, செய். 4 )

''சாதனத்துள், முந்துதிரு வெண்ணிறு
மன்னும் உயிரினுறு மாசொ ழிக்கும்''
(சிவ. நெ. தூது. 82)

என ஆசிரியர் தம் பிற நூல்களிலும் கூறியிருத்தல் காண்க. மற்றும், திருநீறு சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றியது, அணிவார்தம் பிறவியைப் போக்குவது, மும்மலத்தை நீறு படுத்துவது ஆகிய சிறப்பினையுடைய தென்பதைக் கீழ்வரும் பாடல்கள் அறிவிக்கும்,

நெற்றியங் குண்டத்து நெடித டங்கிய
பொற்ற நீள் விழியெரி புணர்ந்து வேள்வி செய்து
அற்றமில் வேள்வியில் அவிர்வெண் பூதியைப்
பற்றற உயிர்க்கெலாம் படிவத் தார்த்தினன்''

(தணிகை - இராமர் அருள் பெறு படலம் செய்-12)

(சிவபெருமான் தனது திருநெற்றியாகிய யாக குண்டத்தில் நீண்டகாலம் அடங்கியிருந்த பொலிவினையுடைய நெடிய விழியாகிய நெருப்பினை மூட்டி, வேள்வி செய்து சோர்வில்லாத அவ்வேள்வியின்கண் விளங்கிய வெண்ணீற்றினை மன்னுயிர்க்கெல்லாம் அவற்றின் பிறப்பு ஒழியும் பொருட்டுத் தன் உடலிலே பூசி யருளினன்.)

''ஆதி பகவன் ஞான வடி(வு)
அழலிற் பூத்து நித்தியமாய்,
அணிந்தோர் தமக்கு வசிகரமாய்,
அருந்தி னோர்கட் காரமுதாய்,
நீதி யறியும் பசுமலத்தை
நீக்கும் ஒருநற் குறிகாட்டி,
நிகழ்பே ரின்பக் கடலூட்டி,
நின்ற புகழ்வெண் திருநீறே.

(திருப்போரூர்.பி.தமிழ் காப்பு 5)

(அழல்-நெற்றி விழியிலுண்டான தீ. பசுமலம்-ஆன்மாவிற்குரிய மும்மலம்)

திருநீறு-அணிந்தோர் வெம்பவத்தை நீறாக்குதலால் நீறு எனப்பட்டது. திரு என்பது அடை மொழி. அன்றியும், உலக

நிலையாமையையும் திருவருள் ஒளியையையும் விளக்குவது மாம்,

மற்றும், திருநீற்றினுக்கு விபூதி-பசிதம்-பசுமம்-சாரம்-இரக்ஷை என்ற பெயர்களும் உண்டு. இவை காரணப் பெயர்கள்.

சிவஞானப் பெருஞ் செல்வத்தைத் தருதலால் **விபூதி** என்றும், சிவமாகிய பொருளை விளக்குவதால் **பசிதம்** என்றும், மிக்க பாவங்களை நீறாக்குதலால் **பசுமம்** என்றும், உயிரினது மலத்தைப் போக்குவதால் **சாரம்** (க்ஷாரம்) என்றும், தீமையினின்று காத்தலால் **இரக்ஷை** என்றுங் கூறப்பெறும்.

## ௨. உருத்திராக்கம்

74. உருத்திரனே ஐயமிலை ஒருருத்தி ராக்கம்
தரித்தவ னென்றெமக்குச் சாற்றும் பெருமானோ.

பொருள் ;

ஓர் உருத்திராக்கம் தரித்தவன்-ஒப்பற்ற உருத்திராக்க மணியை உடலில் அணிந்தவன், உருத்திரனே ஐயம் இலை, உருத்திர மூர்த்தியே யாவன் இதற்கு ஐயம் இல்லை, என்று எமக்குச் சாற்றும் பெருமானோ-என்பதாக அடியேங்கட்கு உபதேசிக்கும் பெருமானோ.

விளக்கம் :

உருத்திராக்கம் - (உருத்திர+அக்கம்) உருத்திராக்ஷம். அக்கம்-கண். இதனைக் கண்மணி, சிவமணி, கண்டிகை யெனவுங் கூறுப.

சிவபெருமான் முப்புரங்களைப் பொடி படுத்துங்கால் கண்களைத் திறக்க முக்கண்களின்றும் பல நீர்த்துளிகள் சிந்தின. அவற்றிலுண்டான மணிகளே உருத்திராக்க மணியாம்.

## இதனைக் கீழ்வருவன விளக்கும்.

''புரங்கள் மூன்றும் பொடித்துறுங் கால்அரன்
திரங்கொள் நாட்டந் திறப்பப் பஃறுளி
பரந்த, அன்னவற் றிற்படு பன்மணி
வரங்கொள் அக்க மணியென ஓதுவார்.''
(சித்.சிகா உருத்திராக்கத்தலம்.செய்-2)

(புரங்கள் மூன்று-முப்புரங்கள்.

நாட்டம்-கண். பஃறுளி-பல துளிகள்.
அக்கமணி-கண்மணி )

''உருத்தி ராக்கத்து உதித்திடுந் தன்மையால்
உருத்தி ராக்கப் பெயர்பெறும் ஒண்மணி.''
( ,, ,, செய். 3

இதனை அணிந்தவர் பெறும் பயனைக், கீழ்வரும் பாடல் உணர்த்தும்.

''ஆயிரங் கலனுடம் பனைத்துத் தாங்கினும்
மாயிரும் பொறையலால் வருவ துண்டுகொல்
நாயகன் விழிமணி பொன்னோர் நாளுடல்
மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே.''
(சீகா - பு. கன்னியர் சருக்கம். செய் 5)

(கலன் - ஆபரணம். பொறை - சுமை. வினை - பிறப்பிற் கேதுவாய வினைகள்.)

விழியணி - உருத்திராக்கம். மீ - மேல்.

## 3 திரு ஐந்தெழுத்து. (பஞ்சாக்ஷரம்)

75. ஒண் மறையின் கண்ணும் உருத்திரம்,
அவ்வைந்தெழுத்தும்
கண்மணியென் றையமறக் காட்டும் அருட்கடலோ.

பொருள் :

உருத்திரம்-ஸ்ரீ ருத்திரம், ஒண் மறையின்-மேலான வேதமாகிய உடம்பின், கண் ஆம்-கண்ணாகும், ஐந்தெழுத்தும்-அதன்கண் உள்ள திருஐந்தெழுத்தும், கண்மணி (ஆம்) என்று-கண்ணின் விழியாகுமென்று, ஐயம் அறக் காட்டும் அருட்கடலோ - அன்பர்களுக்குத் தெளிவுபெறப் புலப்படுத்தும் கருணைக் கடலோ.

விளக்கம் :

ஸ்ரீ ருத்ரம் "கண்ணாம்" என்றும், திருஐந்தெழுத்துக் "கண்மணியாம்" என்றுங் கூறியதற்கேற்ப மறையை உடம்பு என்று உரையிற் கூறப்பெற்றது.

"ஆம்" என்பதனைக் "கண்மணி" என்ற இடத்துங் கூட்டுக. ஐந்தெழுத்தாவது **நமசிவய** என்னும் மந்திரம். வடமொழியில் பஞ்சாக்ஷரம் (பஞ்ச+அக்ஷரம்) என்ப.

எஜுர் வேதத்தில் உள்ள ஏழு காண்டங்களில் நடுவிலுள்ளது நான்காவது காண்டம். அதில் உள்ள ஏழு சம்ஹிதைகளில் நடுவிலுள்ளது நான்காவது சம்ஹிதை. அதில் நடுவிலுள்ளது ஐந்தாவது பிரசன்னம். அதுவே ஸ்ரீ ருத்ரம். அதில் நடுவிலுள்ளது "நம: சோமாயச" என்று தொடங்கும் அந்வாகம். அதில் நடுவிலுள்ளது "**நம: சிவாயச**" என்னும் வாக்கியம்.

அன்றியும், ஸ்ரீ ருத்திரத்திலுள்ள முந்நூற்றொரு சிவ நாமங்களுள் மத்தியிலுள்ள நூற்றைம்பத்தோராவது சிவநாமமே ஸ்ரீ பஞ்சாக்ஷரம் என்பதும் அறியத்தக்கது. இத்தகு சிறப்பினால் ஸ்ரீ ருத்திரத்தைக் "கண்" என்றும், திருவைந்தெழுத்தைக் "கண்மணி" யென்றுஞ் சிறப்பித்தோதினர். ஐந்தெழுத்தின் சிறப்பைச் சிவாகம நூற்றுணிபு காட்டி அன்பர்தம் உளங்கொள்ளுமாறு உணர்த்தினார் சிவஞானி என்பது தோன்ற "ஐயமறக் காட்டும் அருட் கடலோ" என்றார்.

"நமசிவாய்" என்பதற்கு வடமொழியில் 'வணக்கம் சிவனுக்கு" என்று பொருள் கூறுப. நமஸ்-வணக்கம். சிவாய-சிவனுக்கு என்பது பதப்பொருள்.

## சைவ சித்தாந்தம் திருஐந்தெழுத்திற்குக் கூறும் பொருள் வருமாறு:

"சைவ சித்தாந்த நூல் முறைப்படி இதன் எழுத்துப் பொருள் கொள்ளுமிடத்து **நகரம்**, உயிர்கள் உலகியலிற் செல்லுதற்குத் துணை புரிந்து நிற்கும் கடவுளது மறைப்புச் சத்தியைக் குறிக்கும். **மகரம்**, மலமாகிய உலக பாசத்தைக் குறிக்கும். சிகரம் - சிவமாகிய கடவுளைக் குறிக்கும். **வகரம்**, வீடடைதற்குத் துணைபுரியும் அருட் சத்தியைக் குறிக்கும். **யகரம்**, உயிரைக் குறிக்கும். ஆணவத்துட் கிடக்கும் உயிரினைப் பிறவிக் கட்டினுட்படுத்தி, உலகியலிற் செலுத்தியும், ஆணவம் நீங்குதற்குரிய பக்குவம் வந்தபோது கட்டுக்களை யொழித்து அருட்சத்தி வாயிலாகத் தன்பால் வீடு பெறுவித்தும், உயிருக்கு நன்மை புரியும் கடவுளின் பெருந்தன்மையைத் திருவைந்தெழுத்து விளக்குதலான் "நாதன் நாமம் நமச்சிவாய" எனப்பட்டது.

(திரு-கா-சுப்பிரமண்ய பிள்ளை அவர்கள். திருவாசகம் உரை)

"சிவன்அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்
அவன்எழுத் தஞ்சின் அடைவாம்-இவனின்று
நம்முதலா ஓதிலருள் நாடாது, நாடும்அருள்
சிம்முதலா ஓதுநீ சென்று."

(உ-வி.செய்.42)

(சிவ ய நம என்னும் முறையில், சி-ஈசன், வ-அருள், ய-ஆவி, ந-திரோதம்., ம-மலம்)

என்னும் அருளாளர் வாக்கு மேற்கூறிய உரைப் பொருளை வலியுணர்த்தும். மற்றும்,

## திரு ஐந்தெழுத்திற்குக் கூறப்பெறும் பொருள்கள்

1) "திருந்தியஅஞ் செழுத்தடைவே மும்முதலாய் எவையும்
திகழுமதில் இறைவன் அருள் திரோதையிது
பதியாம்
பொருந்துமுயி ரொன்று, மலம் ஒன்ற தாகும்,
போற்றரிய பிரணவத்தோ டேற்றமுட னிறுவும்,
அருந்துயர்சேர் கன்மமுமா யையுமகலா மலமும்
அகற்றுதற்குக் குருலிங்க சங்கமமாம் அதுதான்
விரும்பியமூ வகையுயிர்க்குங் குரு அருளாம், இறையே
யிருலிங்கந், திரோதையெழிற் சங்கமமாய் விரிந்தே."

(பரம-ச.செய்63)

## இதற்குப் பழையவுரை

(இந்தப் பஞ் சாக்கரமே மும்முதலாய் எல்லாந் தானாய் விளங்கும். இதிற் பொருந்திய மூன்றெழுத்துக்கள் (சி.வ ந) பதியாம். உயிருக்குப் பொருந்திய எழுத்தொன்றும் (ய) பசு

ஆகும். மலத்திற்குப் பொருந்திய எழுத்தொன்றும் (ம) பாசம் ஆகும். இவ்வைந்தெழுத்தும் பிரணவத்துடனே கூடி ஏற்றமாய் விளங்கும். அருந்துயராகிய கன்மம் மாயை ஆணவம் ஆகியவற்றை அகற்றுதற்குப் பதியாகிய மூன்றெழுத்தில் (சி.வ.ந.) அருளே (வ) குரு. இறையே (சி) இலிங்கம், திரோதையே (ந) சங்கமம். இப்படி மூவுருவாய் அருள் நிறைந்த சிவன்தானே மூவகை ஆத்மாக்களுக்கும் குரு-லிங்க-சங்கமமாய் விரியும்.)

2) "அங்கம் நம: பதமிதம் சிவ ஏஷ லிங்கம்
ஸம்பந்தம் ஆயபதமேவ தயோர பேதம்!
லிங்காங்க ஸங்கம பதத்ரய போதனார்த்தம்
பஞ்பாக்ஷரோய மபிதாஸபதி மந்த்ரராஜ :!!

என்றபடி நமசிவாய என்னும் திரு ஐந்தெழுத்தை நம :-சிவ :- ஆய என்னும் மூன்று பதங்களாகப் பிரித்து, நம : பதம் அங்கத்தையும் (வணங்கும் ஆன்மாவையும்), சிவ ; பதம் இலிங்கத்தையும், ஆய பதம் சம்பந்தத்தையும் அறிவிக்கும். ஆகவே இலிங்கம் அங்கம் ஆகிய இவ்விரண்டன் சம்பந்தம் இம்மூன்று பதங்களால் உணர்த்தப்படுகிறது என்று பொருள் உரைத்தலும் ஒன்றாம்.

3) திரு ஐந்தெழுத்து, தத்துவமசி மகா வாக்கியப் பொருள் கொண்டது என்பதை இந்நூலாசிரியராகிய சுவாமிகள் தம் நூலில் அறிவித்தலைக் கீழ்வரும் பாடல் அறிவிக்கும்

"அருந்தும் அமுதின் இனியதாய்
அன்போ டளைந்து படிறிலதாய்
அறைந்த மொழி தத் துவமசியின்
அன்றி மாறா இயல்பினதாய்ப்
பொருந்து மறையாம் உடம்பிற்குப்
புக்க உயிராய்ப் பவக்கடற்குப்
புணையாய்க் கயிலை வழித்துணையாய்ப்
பொலிந்த திருவைந்தெழுத் தென்னும்
பரந்த புகழ் மந்திர வேந்து

புவ்னி போதுந் திரும்றுகாய்ப்
பனிவெண் திங்கள் சடை முடியோன்
படிவம் உணர்த்தும் விளக்காகித்
திருந்து பவளத் திருவாயற்
செல்வா! முத்தந் தருகவே
தினைக்கும் கருணைச் சிவஞான
தேவா! முத்தந் தருகவே.

(சிவ-பிள்-செய் 41)

தத்துவம சிமகா வாக்கியப் பொருளை கண்ணி 47. உரையிற் காண்க.

## இதன் பெருமை.

ஏழு கோடி மந்திரங்களுள் ஒப்புயர்வின்றிச் சிறந்திருத்தலின் இதனை **மந்திர அரசு** என்று ஆகமம் கூறும்.

''அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும் - அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்.'' (2-வி. செய் 45)

என்பன அறியத்தக்கன. சைவசமயத் திருமுறைகள் திரு ஐந்தெழுத்தாகிய மந்திரத்தைப் போற்றியுரைத்தலை யாண்டும் காணலாம்.

## 4. குரு

76. அருவாகி நின்றசச்சி தானந்த ஈசன்
குருவாகித் தன்னைக் கொடுக்குமெனச் சொன்னானோ.

(பொருள்)

அருவாகி நின்ற-கட்புலனுக்குத் தோன்றாமலுள்ள, சச்சிதானந்த ஈசன் - உண்மை அறிவு ஆனந்த மயமாகவுள்ள சிவ

பெருமான், குரு ஆகி - குரு மூர்த்தமாகி (உலகில் வந்து), தன்னைக் கொடுக்கும் எனச் சொன்னானே - சிவமாந்தன்மையை (பக்குவான் மாக்களுக்கு) அளித்தருளுமென்று அறிவித்தவனே.

விளக்கம் :

சிவபெருமான் பக்குவான்மாக்களுக்குக் குருவாகத் திருமேனி கொண்டு வந்து அருள்புரிவன் என்பதாம்.

ஆன்மாக்கள் மூவகைப்படுவர். அவர்கள்: (1) விஞ்ஞானா கலர் (2) பிரளயாகலர் (3) சகலர்.
ஆணவமலம் ஒன்றே யுடையவர் விஞ்ஞானாகலர்.

கன்மம், மாயை என்னும் இருமலம் உடையவர் பிரளயாகலர். ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலம் உடையவர் சகலர். கலை முதலிய தத்துவங்களோடு கூடிய ஆன்மாக்களைச் சகலர் என்றும், கலை முதலிய தத்துவங்களைப் பிரளயத்தில் நீக்கப்பெறும் ஆன்மாக்களைப் பிரளாயகலர் என்றும், கலை முதலிய தத்துவங்களை விஞ்ஞானத்தால் (விசேட ஞானத்தால்) நீக்கப்பெறும் ஆன்மாக்களை விஞ்ஞானாகலர் என்றும் பிரித்துக் கூறுவர். விஞ்ஞானாகலராகிய உயிர்களுக்கு இறைவன் அவர் அறிவின் உள்ளீட்டாய் நின்று உணர்த்தி மலத்தை நீக்குவான். பிரளயாகலராகிய உயிர்களுக்கு இறைவன் மான் மழு நான்கு திருப்புயங்களுடைய திருமேனியோடு தோன்றி மலத் தைநீக்குவான். சகலராகிய உயிர்களுக்கு இறைவன் குருமூர்த்தியை யிடமாகக் கொண்டு தோன்றி மலத்தை நீக்குவான். ஆதலின், சகலராகிய உயிர்களை ஆட்கொண்டருளக் குருவடிவாகத் தோன்றியருளுவதால், ''அருவாகி நின்ற சச்சிதானந்த ஈசன், குருவாகித் தன்னைக் கொடுக்கும்'' என்றார். தன்னைக் கொடுத்தலாவது சித்தமலம் அனுபவித்துச் சிவமாக ஆக்கல்.

வன விலங்குகளைப் பிடிப்பவர் பழக்கப்பட்ட மிருகங்களைக் காட்டிப் பிடிப்பர். அதனைப் பார்வை மிருகம் என்பர். அதுபோல

இறைவன் பக்குவான்மாக்களைத் தன்வயமாக்குவதற்கு மானிட சட்டை தாங்கிக் குருவடிவாக உலகத்தில் வந்து அருள்புரிவான். இதனை,

> "பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
> போர்வையெனக் காணு புவி."
>
> (திருவருட் பயன். செய். 45)
>
> (மா- மிருகம்)

(வன விலங்குகளைக் கைப்பற்றித் தம்முடையனவாகச் செய்து கொள்வதற்கு வேடர் பழக்கி வைத்திருக்கும் பார்வை மிருக-மெனப்படும் அவ்வினத்து விலங்குகளைப்போலப் பக்குவான் மாக்களை ஆட்கொண்டு பின் புதன்பால் அடக்கிக்கொள்ள இறைவன் தன்னை மறைத்துக்கொண்டு வரும வடிவமே என்று உலகோர் ஞானாசிரியனுடைய உண்மையை அறிய மாட்டார்) என்னும் அருளாளர் வாக்கு உணர்த்தும்.

**குரு என்ற சொல்லின் பொருள் :**

"குகாரம் அந்தகாரம், ருகாரம் ஒளியாம் அதனால், குலவு இருள் ஓட்டியொளி கொடுப்பவர் குருவாம்" (வீர-பு வீர-செய் 158.) என்றபடி குகரம் அஞ்ஞானம், ருகரம் ஞானமுமாகவின் அஞ்-ஞானத்தை நீக்கி ஞானத்தைக் கொடுப்பவர் குரு ஆவர்.

## 5. இலிங்கம்

17. பரம சிவமெனவும் பண்டைமறை போற்றும்
பிரமமென வும்பேர் பெறுமிலிங்கம் என்றானோ.

பொருள் :

இலிங்கம் - மகாலிங்கம், பரமசிவ மெனவும் - பரமசிவமென்றும் பண்டை மறை போற்றும் பிரமம் எனவும் - தொன்மையான

வேதங்கள் துதிக்கும் பிரம்ம என்றும், பேர் பெறும் என்றுஞ் பெயர்களைப் பெறுமென்று உரைத்தவனோ.

விளக்கம் :

மகாலிங்கம், பரமசிவம், பிரமம் என்னும் பெயர்கள் இறைவனாகிய ஒரு பொருளையே குறிக்கும் பரியாய நாமங்கள் பெயர்களால் வெவ்வேறு பொருளென்று மலைவுறற்க என்பார் "பேர் பெறும் இலிங்கம்" என்றார்.

ஆசிரியர் இவ்வாறே தம் நூலில் ஆள்வர் அவை கீழ் வருவன.

"உலகமெனும் ஓவியங்கள் நிகழ்த்தும் ஒரு படமாகி,
ஒளிகள் எல்லாம்
இலகுபர ஒளியாகிச் சச்சிதா நந்தமாய்,
ஏக மாகிப்,
பல கலைகள் பரப்பிரமம் பராசிவமென
லிங்கமெனப் பகரா நின்ற
திலகநுதல் உமைகண்வன் திருவடித்தா மரைவணக்கம்
செய்து வாழ்வாம்.
(சித்-சிகா-பாயிரம். செய் 1.)
(படம்–படரூபம்)
'பரசிவம் பிரம மென்னப் பட்டோரு திரிவு மின்றி
யுரைமனம் இறந்து நின்ற ஒருசிவ லிங்கம் தன்னில்'
(பிரபு-துதிகதி - செய். 18)

(உரை மனம் இறந்து நின்ற - வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாமலுள்ள. திரிபு - விகாரம்.)

இலிங்கம் என்பதன் பொருள் :

"ஏதமிலா இலிங்கஎழுத் திரண்டுங் கூறின்,
லிகரமுல கொடுக்குதல், உற்பவம் ககாரம்,
ஆதலினால் லிங்க மென்னு நாமம்
அறைகுவர்"
(புரமு - சசெய். 17)

என்றபடி "லிங்கம்" என்ற பெயரிலுள்ள லி என்ற எழுத்து உலகத்தை ஒடுக்குதல் என்னும் பொருளது. கம் என்னும் எழுத்து உலகத்தை உண்டாக்குதல் என்னும் பொருளது. ஆகவே, உலகம் ஒடுங்குதற்கும் உண்டாவதற்கும் இடமாகவுள்ள பொருள் எதுவோ அது லிங்கம் எனப்படும்.

## 6. சங்கமம்

78. திரஞ்சரமென் றீசன் திருவுரு இரண்டுள்
பரஞ்சரமென் றோதும் பவளவாய் அண்ணலோ

பொருள் :

திரம் சரம் என்று - தாவரலிங்கம் சங்கமலிங்கமென்று (கூறப்பெறும்), ஈசன் திருவுரு இரண்டுள் - சிவபெருமான் கொண்ட அழகிய இரு வடிவங்களுள், சரம் பரம் என்று - சங்கமலிங்கம் மேலானதென்று, ஓதும் பவளவாய் அண்ணலோ - கூறும் பவளம் போலும் செந்நிறத்த திருவாயினையுடைய தலைவனோ.

விளக்கம் :

திரம் - (ஸ்திரம்-உறுதியாயுள்ளது, நிலையியற்பொருள்)

ஸ்திரலிங்கமாவது தாவரலிங்கம். திருக்கோயில்களில் பிரதிட்டை செய்யப்பெற்ற இலிங்கத்திருவுருவைக் குறிக்கும். சரம்-சரலிங்கம், இயங்கும் லிங்கம், சங்கமர்களாயுள்ளவர்கள்.

"அண்டத்தில் தாபித்ததாம் தாபரலிங்கம்"

(அ-வெ. செய் 22)

(உலகில் ஓரிடங் குறித்துப் பிரதிட்டை செய்யப்பெற்றது தாபரலிங்கமாம்)

"சரத்தோடு திரமெனத் தரித்தி ரண்டுரு
அருட்சிவன் உலகினில் அருள்செய் துற்றிடும்

திரத்தினில் அன்புசெய் செய்கை போலவே
சரத்திலும் அன்புசெய் தன்மை வேண்டுமால்."
(சித்-சிகா, திரிவித சம்பத்திதல்ம். செய்-3)

(அருளுருவாகிய சிவபெருமான் சங்கமலிங்கம், தாவரலிங்கம் என்று சொல்லும்படி இரண்டு இலிங்க ரூபம் தரித்து உலகில் பத்தருக்கு அருள்செய்து கொண்டிருப்பன். ஆதலின், திர-லிங்கத்தில் அன்பு செய்தல் போலவே சரலிங்கத்திலும் அன்பு போலவே சரலிங்கத்திலும் அன்பு செய்கின்ற தன்மை வேண்டும்.)

"தாவர சங்கமங்கள் என்றிரண்டு உருவாய் நின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருணை வைப்பன்"
(சிவ-சித், சூம் 2. அதி. 2 செ-28)

என்பன ஈண்டொப்பிடத்தக்கன.

[illegible]

"சம்பு-சரம் அசரந்.
தானாகி ஆய்பிர்சன்னஞ் சாற்றும் சரத்திலென
தானாகமமுரைக்குந் தான்."
(அ. வே செய். 23)

(அசரமாகிய தாவரலிங்கத்திலும் சரமாகிய சங்கமலிங்கத்திலும் சிவபெருமான் சம வியாபகமாயிருந்தாலும் தாவர லிங்கத்தி-லிருப்பதிலும் சங்கம லிங்கத்தில் விசேஷ பிரசன்னமாயிருக்கு மென்று ஆகமங்கள் சொல்லும்.)

"போதனத்தின் முல்லையிலிங்கம், குருவா மேனி
கூறியசங் கமமுகமாம். குலவுங் கீரம்
போதமுலை பொழிந்திடுமென் றதற்கன் பாகப்
புல்லளிக்கில் அருந்தியிடா (து) உடலங் கொள்ளா
நீதியினால் அருந்துமுகத் தளித்தால் எங்கும்
நிறைவாகும். முத்திசிவ லிங்கத்தேனும்
ஏதமில்சங் கமத்தைவழி படுவோர்க் கன்றி
எண்ணரிய சிவாநுபவம் எய்தொ ணாதே"
(பிரம-ச. செய். 47)

(கீரம்-க்ஷீரம், பால். பசுவின் முலையைப் போல இலிங்கம், உடலைப் போல குரு, முகத்தைப் போல சங்கமம்.)

"படமாடக் கோயில் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்கங் காகா,
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்கு அதாமே."

(திருமந்திரம்-செய் 1857)

(படமாடக் கோயில் பரமன்-முப்பத்தாறு தத்துவங்களைப் படம் போல விளக்குவதாகிய மாடக்கோயிலுள்ள பரமன். நடமாடக் கோயில் நம்பர்-சிவ சிந்தனையுடன் இயங்கும் கோயிலாகவுள்ள திருமேனியுடைய சிவனடியார்.)

"சிவனே ஜங்கமாகாரத்தில் பஞ்ச முத்திராதி பூஷணங்களைத் தரித்து உதித்தவனென்றும், இவ்வுலகத்திற்குக் கர்த்தா எனப் பட்டுஜங்கம ரூபத்தினால் பிரகாசிப்பான் என்றும் வீராகமததில் கூறப்பட்டுள்ளது." (சித்-சிகா. திரு-நாகி செட்டியார், உரை. திரிவித சம்பத்தித் தலம். செய். 4)

## சங்கமருடைய இலக்கணம்:

'ஜடை, கரஸ்தல லிங்கம், ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மந்திரத்தை ஜபிக்கும் நா, பஸ்மாங்கித தேகம், கண்டத்தில் ருத்திராக்ஷ மாலிகை, சாந்தி கலையுள்ள முகத்தில் கர்ண குண்டலங்கள், ஆதி மத்யாந்த விரஹிதம், மஹாநந்த ரூபம் ஆகிய இவற்றைத் தரித்துள்ளவனே அநாதி சரணன்"

(சித் சிகா)

## சங்கமம் என்பதன் பொருள்.

இச்சொல்லில் மெய்யெழுத்து நீங்கலாக ச-க-ம என்ற எழுத்துக்கள் உள்ளன. ச சனனம் அறுதலையும், க நினைவறுதலையும், ம மலம் அறுதலையும் குறிக்கும். ஆகவே இவ்வியல்பினன் சங்கமன் ஆவன்.

## 7. பாதோதகம்

79. அங்கம் புனைவோன் அடிப்புன லல்லாதுப்வப்
பங்கம் கழுவப் படாதென்று சொன்னானோ.

பொருள் :

அங்கம் புனைவோன்-என்பு மாலையை அணிபவனாகிய சிவபெருமானது, அடிப்புனல் அல்லாது-திருவடிநீர் அல்லாமல், பவப்பங்கம் கழுவப்படாது என்று சொன்னானோ-பிறவியாகிய சேறு கழுவப்படாதென்று உரைத்தவனோ.

விளக்கம் ;
பாதோதகம்-(பாத+உதகம்) திருவடிநீர். இஃது
இலிங்க பாதோதகம்.

பாதோதகம் மூன்று வகைப்படும். அவை :

(1) குரு பாதோதகம்

(2) இலிங்க பாதோதகம்

(3) கருணோதகம் என்றும், இலிங்க பாதோதகம் விநயோதகம் என்றும், சங்கம பாதோதகம் ஸமயோதகம் என்றும் சொல்லப்படும்.

''பரிவுடைய இட்டலிங்க பாததீர்த் தத்தால்
விரிவுடைய கன்மவினை வெட்டும்''
என்று கூறும். (வெட்டு-அழிக்கும்)

(அ.வெ செய் 53)

பங்கம்-சேறு பிறவியைப் பங்கம் என உருவகப் படுத்தியதற்கேற்ப ''கழுவப்படாது'' என்று நயம்படக் கூறினார்.

## 8. பிரசாதம்

80. அந்தக் கரணத்து அழுக்கறுப்ப தெங்கள்பரன்
சந்தப் பிரசாதந் தானென்று சொன்னானோ.

பொருள் :

அந்தக் கரணத்து அழுக்கு அறுப்பது-மனத்தின் மாசைப் போக்குவது. எங்கள் புரன் சந்தப் பிரசாதந்தான் என்று சொன்னானோ - எங்களுடைய இஷ்டலிங்கப் பெருமானது அழகிய பிரசாதமே (பிறிதில்லை) என்று கூறியவனோ.

விளக்கம் :

பிரசாதம் - சிவப் பிரசாதம். இறைவனுக்கு அர்ப்பித்த பொருள். இது [illegible] பிரசாதம் என்னப்படும். அந்தக் கரணங்களில் முதன்மையானது மனம். அதன் குற்றம் அவா. அவா அற்றிருத்தல் அந்தக் கரண சுத்தியாம்.

''அந்தக் கரண சுத்திதா னாவது அவா அற் றிடுதலே'' என்பது இத்தனை அறிவிக்கும்.

(பிரபு. மனோலய கதி. செய். 12)

சிவப்பிரசாதத்தின் பெருமையை,

''தாய்க்கு வழுவின் மகளிர்க்குத்
தந்தை தனக்குப் பசுவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கி டர்செய்
தீர்வில் கொடிய பாதகமும்
போக்கும் இமைப்பிற் கரணத் துணையும்
புனித மாக்கிச் சிவமாக
ஆக்கும் அரன்றன் பிரசாதம்
ஆயின் அதற்கு நிகருண்டோ.''

(பிரபு. மருள. செய். 15)

(தீர்வில் கொடிய பாதகம்-பிராயச் சித்தத்தால் போக்க முடியாத மா பாதகங்கள்.)
என்பது உணர்த்தும்.

81. தருணமதில் சீறுந் தனிவிழி காட்டாமல்
கருணை குடியிருக்குங் கண்களொடு வந்தானோ.

பொருள் ;

தருணமதில்-யாதானுமொரு சமயத்தில், சீறும்-வெருளும், தனிவிழி காட்டாமல்-ஒற்றை விழியாகிய நெற்றிக் கண்ணை உலகோர் அறியக் காட்டாமல் (மறைத்து வைத்து) கருணை குடியிருக்கும்-கருணை தானிருத்தற்குரிய இடமாகக் கொண்டிருக்கும், கண்களொடு வந்தானோ-இணை விழிகளுடன் தோன்றியவனோ.

விளக்கம் ;

சிவபெருமான் சிவஞானியாக உலகில் வந்த ஞான்று தனது நெற்றிக்கண்ணை மறைத்து அருள் விளங்கும் இரு கண்களுடன் எழுந்தருளினார் என்பதாம்.

மன்மதன் சிவபெருமான் கொண்ட யோகநிலையை அழிக்க மலர்க்கணையைத் தொடுத்தபோது வெகுண்டு அவனை எரித்த கண்ணாதலின், "தருணமதில் சீறும் தனிவிழி" என்றார்.

கருணை-அருள். "அருளாவது. உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவம் அளித்தற்கண் உளதாகிய இரக்கம்." (சிவஞானமாடியம்)

ஞானாசிரியர் மாணக்கனுக்கு அருள் புரிவது திருக்கண் ணோக்கத்தால் ஆதலானும் "கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம்" (குறள். 575)

ஆதலானும் சிவஞானியின் திருக்கண்களில் அருள்விளங்கலானும் "கருணை குடியிருக்கும் கண்கள்" என்று சிறப்பித்தோதினார்.

82. ஏரூருந் தான்வாழ் இடமேநற் காசியுந்தென்
ஆரூரும் அம்பலமும் ஆக்குசிவ ஞானியோ.

பொருள் :

தான் வாழ் ஏர் ஊரும் இடமே-சிவஞானியாகிய தான் வாழ்கின்ற அழகுமிகும் இடம் ஒன்றனையே, நற்காசியும் தென் ஆரூரும் அம்பலமும் (ஆக) ஆக்கு சிவஞானியோ-நல்ல காசி யென்னும் திருததலமாகவும் தெற்கேயுள்ள திருவாரூர் என்னுந் திருத்தலமாகவும், சிதம்பரம் என்னுந் திருத்தலமாக வும் (ஆக) அன்பர்களுக்கு ஆக்குகின்ற சிவஞானியோ.

விளக்கம் ;

"ஆக" என்னும் சொல் வருவித்துரைக்கப் பட்டது. காசி யிலே உடலை விடுவதாலும் திருவாரூரிலே பிறப்பதனாலும் சிதம்பரத்தைக் காண்பதாலும் முத்தியுண்டாமென்பது ஐதிகம்.

"தில்லையைக் காண, காசியில் இறக்க
சிறக்கும் ஆர்ஊர்தனில் பிறக்க,
எல்லையில் பெருமை அருணையை நினைக்க
எய்தலாம் முத்தி"

(திருநகரச் சருக்கம் செய் 45)

என்னும் அருணாசலப் புராணம்.

தன்பால் உடலை விட்டவர்க்கு முத்தி தருவது ஒரு தலமாக வும், பிறந்தார்க்கு முத்தி தருவது ஒரு தலமாகவும், கண்டார்க்கு முத்தி தருவது ஒரு தலமாகவும் உள்ளன. ஆனல் திருமடங்கொண்டுறையும் தலம் ஒன்றனையே தன்பால் இறந் தார்க்கும் பிறந்தார்க்கும் கண்டார்க்கும் முத்தியளிக்கும்படி ஆக்குகின்ற சிவஞானியென்க.

"சிறந்த பரம சிவனுருவந்
தெருண்ட பரம சிவஞானி
யுறைந்த எல்லை விற்கோடி
யாவும் பாவம் ஒழிந்துவிடும்."

(சிவ.த.ஐவகைப் பாச இயல்.செய்2)

சிறப்பினையுடைய பரமசிவனது சொரூபத்தை யுணர்ந்த மேலான் சிவஞானி எழுந்திருளியிருக்கும் எல்லைக்குக் கோடி விற்கிடையளவும் பாவம் ஒழிந்துவிடும்.) என்பது காண்க

இதனால் சிவஞானி திருமடங்கொண்டுள்ள தலத்தின் சிறப்புக் கூறப்பெற்றது.

83. தன்பாத தாமரைதோய் தண்புனலே கங்கையாய்
வன்பாச நீக்க வழங்குசிவ ஞானியோ.

பொருள் :

தன்பாத தாமரை தோய் தண் புனலே கங்கையாய்-தனது திருவடியாகிய தாமரை மலரிற்படிந்த தண்ணீரே கங்கையாகி, வன்பாசம் நீக்க-உயிரைப் பற்றிய வலிய பாசம் நீக்கமுற, வழங்கு சிவ ஞானியோ - அடியார்களுக்கு வழங்குகின்ற சிவஞானியோ.

விளக்கம் ;

புனலே, கங்கையாய். நீக்க வழங்கு சிவஞானியோ என்க. இது குரு பாதோதகத்தின் சிறப்பை உணர்த்தியதாம்.

சிவனடியாருடைய திருவடிப் புனல் கங்கை நீரிலும் சிறப்புடையதென்பதை

"பந்த அகன்ற சிவபத்தர் பாதம் விளக்கும் புனற்குழியில்
வந்து பிறந்து மூழ்கியதில் வைகும் புழுவின் பெரும்பேறு
முந்து கங்கை முதலவா மூற்றும் படிந்து தீவினைகள்
சிந்தும் அந்த ணாளருமே சேரார் என்று மறைசாற்றும்."
(பிரபு-மருள்-செய்.14)

இப்பாடல் அறிவிக்கும்.

கங்கை நீரினும் சிவ ஞானியின் திருவடிப்புனல் சிறப்புடையதாயினும் கங்கையைப் புண்ணிய நதியென்றும், தெய்வ

நதியென்றும் உயர்த்திக் கூறும் உலக வழக்குண்மையானும், அந்நீரிற் படிந்தவர் பாவம் நீங்கப் பெறுவரென்னும் ஐதிகம் உண்மையானும் "தண்புனலே கங்கையாய்" என்று அதனை எடுத்தோதினர்.

ஆகி என்பது ஆய் என்றாயிற்று.

84. மண்படைத்த நான்முகனுர் மானுடர்தம் ஒண்முகத்தில்
கண்படைத்த பேறுபெறக் காட்டும் உருவானே.

பொருள் :

மண்படைத்த நான்முகனார் — மண்ணுலகைப் படைத்த நான்முகக் கடவுள் (பிரமன்), மானுடர் தம் ஒண் முகத்தில் — மனிதர்களுடைய அழகிய முகத்தில், படைத்த கண் பேறு பெறக் காட்டும் உருவானோ – உண்டாக்கிய கண்கள் பெறுவதற்குரிய நற்பயனைப் பெற யாவரும் அறியுமாறு காண்பிக்கும் சிவ-சொருபமாயுள்ள திருமேனியையுடையவனோ.

விளக்கம் :

நான்முகனார், படைத்த கண், பேறுபெறக் காட்டும் உருவானோ என்க.

"கண்காள் காண்மின்களோ-கடல்நஞ் சுண்ட கண்டன்றன்னை
எண்தோள் வீசிநின் றாடும் பிரான்றன்னைக் கண்காள்
காண்மின்களோ."

(திருநாவுக்கரசர் தேவாரம், திரு அங்கமாலை 2)

"கண்ணா அவனைக் காண்க, செவி காதவனைக் கேட்க வாய்ப் புண்ணவனைப் பாட, பதஞ்சூழ்க எண்ணிறைந் நெய்யொத்து நின்றானை நீலமிடற் றானையெ கையொத்து நேர்கூப்பு க."

(புறம் — வெ. கடவுள் வாழ்த்து)

என்பவற்றால் கண்பெறும் பேறு சிவதரிசனமே யென்பதறியலாம்

"சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே"

(திருமந்திரம். 1576)

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி"

( " " 1581)

என்னும் அருளுரையின்படி குருதரிசனமே சிவதரிசனமாம். அன்றியும், சரியை, கிரியை, யோகம், புரிபவர்களை அவரவர் செய்கையால் அறிதல் கூடும். எச்செயலுமில்லாத ஞானியை அறிபவர் அரியர். உலகில் இலைமறை காய்போல் ஞானி இருப்பன். ஆதலால் உலகினர் ஞானியைக் கண்டறிதல் இயலாத தாம் ஆயினும், சிவஞானி திருமடம் அமைத்துக்-கொண்டு சிவஞான பாலய தேசிகர் என்னுந் திருப்பெயருடன் யாவருங் கண்டுகளிப்புறச் சிவவடிமாக விளங்குகின்றராதலின். படைத்தகண் பேறுபெறக் காட்டும் உருவானோ" என்றார்,

"பொடிமறை தழல்போல் இருந்துல கினர்கட்
புலப்படான் உயர்சிவ ஞானி
புவியிபெலன் றிருப்பு அனையன்யான் என்று
பொங்கொளி இரவிபோற் புரிசைக்
காஞ்சிற் போந்த கற்பகமே!
கதிர்மணி வரன்றி யருவிவந் திழியுங்
கயிலை நேர் மயிலைகா வலனே."

(சிவ - கலம் செய்.4)

(பொடிமறை தழல்போல்-சாம்பலால் மறைக்கப்பட்ட நெருப்பு போல) இரவி - சூரியன்)

என்று ஆசிரியர் விளக்கியுரைத்தல் காண்க.

நான்முகனார் - ஆர் விகுதி - உயர்வின்கண் வந்தது. பெற என்னும் செய வெனெச்சம் காட்டும் என்னும் பிறவினை கொண்டது.

85. ஆர்க்குங் கொடுநோய் அனைத்தும் கடைக்கண்ணால்
தீர்க்கும் கருணைச் சிவஞான தேசிகனோ.

(பொருள்)

ஆர்க்கும் கொடுநோய் அனைத்தும் - யாவர்க்கும் கொடிய நோய்கள் யாவற்றையும், கடைக்கண்ணால் தீர்க்கும் கருணைச் சிவஞான தேசிகனோ-தம் கடைக்கண் பார்வையால் போக்கும் அருளையுடைய சிவஞான தேசிகனோ.

(விளக்கம்)

கொடுநோய்-மணி-மந்திர - ஔடதங்களால் நீக்கப்படாத நோய். கருணை-உயிர்கள் மேல்கொண்ட இரக்கம். "ஆர்க்கும்" என்றதால் நல்லார் பொல்லார் என்று நாடாது அருள்புரிந்தா ரென்பதாம்.

ஆர்க்கும் - யார்க்கும், எவர்க்கும் ஆர் - யார் என்பதன் மரூஉ. கடைக்கண் - கண்கடை என்பதன் போலி. முன் பின்னாகத் தொக்கதென்றலுமாம்.

மக்களுக்கு நோய் முதலியவற்றாலுண்டான இன்னல்-களைத் திருவருள் துணைகொண்டு சிவஞானி தீர்த்தருளினா ரென்பதை ''பெருமுடக் கால் நிமிர்ந்தது'' (சிவ.பிள்-செங்கீரை செய். 6) என்று தொடங்கும் பாடல் விளக்கமாயுரைக்கும்.

இதனால் சிவஞானியின் திருக்கண்ணோக்கச் சிறப்புக் கூறப்பெற்றது.

86. செப்ப முற எனது சிந்தைவீட் டாசையெனுங்
குப்பை துகைத்துக் குடியிருக்க வல்லானோ.

(பொருள்)

செப்பம் உற - அடியேன் - செம்மை பெற, எனது சிந்தை வீட்டு - எனது மனமாகிய வீட்டின்கண் உள்ள, ஆசை எனும் குப்பை துகைத்து குடியிருக்க வல்லானோ.

(விளக்கம்)

ஒரு வீட்டில் குடிபுகுவோர் அதன்கண் உள்ள குப்பையை அகற்றித் தங்குவர். அவ்வாறே என் உள்ளத்துள்ள ஆசையைப் போக்கி அமர்தல் சிவஞானியின் பெருங்கருணைத் திறத்தாலேயே ஆதல் வேண்டுமென்பார் "ஆசையெனும் குப்பை துகைத்துக் குடியிருக்க வல்லானோ" என்றார்.

சிந்தையை வீடாகவும், ஆசையைக் குப்பையாகவும் உருவகப்படுத்தியதால் இஃது உருவக அணி.

செப்பம்-செம்மை, சிவமாந்தன்மை துகைத்தல்-அழித்தல்.

87\. தன்னையரு ளாளனெனுந் தன்மை யுலகறிய
என்னையடி யாரோ டெழுந்தருளிக் காத்தானோ.

(பொருள்)

தன்னை - சிவஞானியாகிய தன்னை அருளாளன் எனும் தன்மை-அருளாளன் என்று கூறும் இயல்பை, உலகு அறிய-உலகோர் யாவரும் அறியும் வண்ணம், என்னை - ஆட்கொள்ளுந் தகுதியற்ற அடியேனை, அடியாரொடு-தன்னைச் சார்ந்துள்ள அடியார்களுடன், எழுந்தருளிக் காத்தானோ-எழுந்தருளி இனிப் பிறவியுண்டாகாவண்ணம் காப்பாற்றியவனோ.

(விளக்கம்)

தன்மை (தன்மையை) உலகறிய, என்னை, காத்தானோ என்க. ஞானகுரவர்கள் தம்மையடைந்த தகுதியுடைய சீடர்களை யேற்றுக் கொண்டு அவர்களுக்கு உபதேசமொழி முதலியவற்றால் அருள் புரிவர். அங்ஙனமிருக்க, சிவஞானி தகுதியற்ற தன்னை அடியார்களுடன் வந்து ஆட்கொண்ட திறம் அருளாளன் என்பதை உலகறிய மெய்ப்பித்ததாம் என்பர் ஆசிரியர்.

இதனால் சிவஞானி தம்மையாட் கொண்ட திறத்தை புலப்படுத்துகிறார்.

88. மெய்த்த அறிவாம் விளங்குகதை யொன்றெடுத்துக்
தத்துவமா மட்கலத்தைத் தாக்கும் பெருமானே.

(பொருள்)

மெய்த்த அறிவாம்-மெய்ஞ்ஞானமாகிய, விளங்கு கதை ஒன்று எடுத்து-விளாங்கா நின்ற ஒரு கதையை யெடுத்து. தத்துவமா மட்கலத்தை-தத்துவங்களாகிய மண்பாண்டத்தை. தாக்கும் பெருமானே-உடைக்கும் பெருமானே.

(விளக்கம்)

கதை-கதாயுதம். மெய்ஞ்ஞான்ம் ஒரு பொருளை ஐயந்திரி-பின்றி ஆராய்ந்து உண்மைத்தன்மையை உணர்த்துவதாம்-தத்துவங்களெல்லாம் உயிர்களோடு பொருந்துவன என்றறிந்து நீக்சித் தத்துவங்களுக்குக் கப்பாற்பட்டவனாகியபரம் பொ-ளை அறிபவன் தத்துவஞானியாவன். ஆதலால், ''தத்துவமா மட்கலத்தைத் தாக்கும் பெருமானே'' என்றார். இதனை,

''தனுகரண புவன் போகம் தற்பரம் பந்தம் வீடென் (று)
அணுவினே டெல்லா மாகி யடைந்திடும் தத்து வங்கள்
இனிதறிந் திவைநி விர்த்தி முதற்கலை யிடத்தே நீக்கி
நனிபர முணர்ந்தோன் அந்தத் தத்துவ ஞானி யாவன்.''
(தத்துவஞானி-மெய்ஞ்ஞானி) (சிவ-சித்.சுப.பிரமாண
(சூ-ம் 4)

(அணு-உயிர் தத்துவம் முப்பத்தாறு; அவை : சிவதத்துவம் 5. வித்தியா தத்துவம் 7. ஆன்ம தத்துவம் 24) என்பதறியலாம்.

''சோதி லிங்கநின் றகத்தினிற் சுடர்வுற, யோகி
பூத மாதிய தத்துவங் கண்டவை பொருந்தான்.

போத ஆரழ விடைப்புலன் யாவையும் போக்கித்
தீதி லாமனத் துவகைபெற் றிடுஞ்சிவ யோகி.''
(சித். சிகா சுவிகிருதப்பிரசாதத் தலம் செய்.4)

(அகம்-மனமாகிய எட்டிதழோடு கூடிய இதய கமலம்.

சோதிலிங்கம்-ஒளி யுருவாகிய மகாலிங்கம். இதய கமலத்தில் எப்போதும் மகாலிங்கம் விளங்கிக் கொண்டிருக்கவும், அந்த மகாலிங்கத்தில் தத்துவங்கள் யாவற்றையும் அடக்கிக் கொண்டிருக்கும் சிவயோகி தேகம்-இந்திரியம்-உலகம் முதலான தத்துவங்களினால் இடர்ப்படுபவனில்லை என்பதாம்) என்பதும் ஈண்டறியத் தக்கது.

மெய்ஞ்ஞானத்தைக் கதாயுதமாகவும். தத்துவங்களை மட்கலமாகவும் உருவகப் படுத்தியதால் இஃது உருவக அணி.

89. வழுவின்றித் தன்மா வலியுலக மேத்த
மழுவின்றிப் பாவ மரமெறிய வந்தானோ.

(பொருள்)

வழு இன்றி-குற்றமில்லாமல், தன் மாவலி-தனது பேராற்றலை. உலகம் ஏத்த-உயர்ந்தோர் போற்ற, மழுஇன்றி கரத்தில் மழு என்னும் ஆயுதமில்லாமல், பாவ மரம் எறிய-எங்களது பாவமாகிய மரத்தை வெட்ட, வந்தானோ-தோன்றியவனோ,

(விளக்கம்)

திருக்கரத்தில் மழுவாயுதத்தைக் கொண்டுள்ள சிவபெருமான், சிவஞானியாக அவ்வாயுதமில்லாமல் வந்தான் என்றபடி.

மரத்தை வெட்டக்கையில் ஆயுதமின்றி வந்தானென்னும் நயங் காண்க, பாவத்தை மரம் என உருவகப்படுத்தியதற்கேற்ப ''எறிய'' எனப்பட்டது. பாவம்-தீவினையின் பயன்.

ஏறிதல்-வெட்டுதல். மழு-பரசு என்னும் ஆயுதம்.

90 இணையாது மில்லா இடர்ப்பவ வேலைக்குப்
புணையாக வந்தருளும் புண்டரிகத் தாளானோ.

(பொருள்)
யாதும் இணையில்லா — எத்துன்பமும் ஒப்பாகாத, இடர்ப்-பவ வேலைக்கு — துன்பத்தைத் தரும் பிவியாகிய கடலைக் கடப்பதற்கு, புணையாக வந்தருளும் புண்டரிகத்தாள்ானோ தெப்பமாக வந்து உதவும் தாமரை மலர்போலும் திருவடியையுடையவனோ.

(விளக்கம்) இக்கண்ணி,

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார்
இறைவன் அடிசேராதார்.'' குறள் (10)

என்னுங் குறட்பாவின் கருத்தைத் தழுவியதாம்.

பிறந்தார்க்கு இறப்பு உண்டு. அதன்பின் முன்செய்த வினைப பயனை அனுபவிக்க மீண்டும் பிறப்புண்டாம். இங்ஙனம் அள-வின்றி வருதலின்''பவ வேலை'' என்றார்.''பிறந்தா ருறுவது பெருகிய துன்பம்'' (மணி-ஊரலர்- 64) ஆதலின், ' இணையாது மில்லா இடர்ப்பவம்'' என்றார். கடலைக் கடப்பதற்கு ஞானாசி-ரியருடைய திருவடியே துணையாமென்பார் அதனை விசேடித்துப் ''புண்டரிகத் தாளானோ'' என்றார்,

பிறவியைக் கடலாகவும் திருவடியைப் புணையாகவும் கூறியதால் இஃது உருவக அணி.

இதனால் பிறவி நீக்கம் பெற ஞானாசிரியருடைய திருவடியைச் சரர்தல் வேண்டுமென்பது உணர்த்தப்பெற்றது.

91 ஊனோ உயிரோ உயிர்க்குயிரோ ஆனந்தத்
தேனோ அமுதமோ சிவஞான தேசிகனோ.

(பொருள்)
ஊனோ — இவ்வுலகில் இயங்கவுதவும் என் உடலோ.
உயிரோ — இன்றியமையாமையால் என் உயிரோ.

உயிர்க்கு உயிரோ—என் உயிர்க்கு உயிராயுள்ள இறைவனோ. ஆனந்தத்தேனோ—சிவானந்தமாகிய இனிய தேனோ அமுதமோ—உறுதி பயத்தலின் அமுதமானவனோ. சிவஞான தேசிகனோ,

(விளக்கம்)

ஊன் உடலைக் குறித்தலால் ஆகுபெயர்.

ஆசிரியர் தம் ஞானாசிரியர்பால் கொண்டபேரன்பை அடுக்கிய மொழிகளால் வெளிப்படுத்துகின்றார்.

92. அண்ட முழுதும் அணுவிற் சிறியவாக்
கொண்ட பெருமைக் குணக்குன் றனையானோ.

(பொருள்)

அண்ட முழுதும்-உலகம் யாவும். அணுவில் சிறியவாக் கொண்ட-ஓர் அணுவினும் சிறியனவாகக் கொள்ளத்தக்க, பெருமை-பெருமையையுடைய, குணக்குன்று அணையானோ-குணக்குன்றை யொத்தவனோ.

(விளக்கம்)

பெரிதாயதொரு பொருளைக் கூறக்கருதுவார் உலகைக் கூறுவர். ''ஞாலத்தின் மாணப் பெரிது.'' (குறள், 102) என்பதாலும்'' பெரிது பெரிது புவனம் பெரிது'' என்னுந்தனிப்-பாடல் அடியாலும் அறியலாம். அங்ஙனம் பெருமைக்குக் கூறப்படும் அண்டம் ஒன்றேயன்றி யாவும் சிவஞானியின் பெருமையோடு அளவிடுங்கால், ஓரணுவினும் சிறியவா-மென்றால் அவர் பெருமை அளப்பரிதாம். பெருமை சிவ-ஞானியின் தவப்பெருமை,

அருள், துறவு, தவம், மெய்யுணர்வு, ஈதல் ஆகிய நற் குணங்களின்று சலியாமையும் ஞானவொளியால் யாவரும்

அறியும் உயர்வும் பெற்று விளங்கலின் ''குணக் குன்றனையானோர்'' என்றார். ''குணமென்னுங் குன்றேறி நின்றார்'' (குறள்-29) என்னும் வள்ளுவர் வாக்கு ஈண்டு நினைவிற்கு வரும்.

அணுவிற் சிறிது-பரமாணு, மிக நுட்பமாயுள்ள அணு. சிறியவாக என்பது சிறியவா என ஈறு குறைந்தது. இதனால் சிவஞானியின் அளவில் பெருமை யுணர்த்தப் பெற்றது.

93. எங்கள் மலஇருளுக்கு ஈண்டு மயிலைமிசைச்
செங்கதிர்போற் றோன்றுஞ் சிவஞான தேசிகனோ.

(பொருள்)

எங்கள் மல இருளுக்கு-அடியேங்களது ஆணவமலமாகிய இருள் நீங்குவதற்கு, ஈண்டு மயிலைமிசைச் செங்கதிர்போல் தோன்றும் சிவஞான தேசிகனோ-இங்கு மயிலமலையின் கண் சூரியனைப் போலக் காட்சி நல்கும் சிவஞான தேசிகனோ.

(விளக்கம்)

உதயகிரியில் சூரியன் தோன்றிய அளவில் புறவிருள் நீங்குகிறது அவ்வாறே எங்களது அக இருளாகிய ஆணவமலம் நீங்க மயிலமலையின் கண் எழுந்தருளிய (ஞான சூரியனாகிய) சிவஞான தேசிகன் என்க.

ஆணவமலம் மும்மலங்களுள் ஒன்று அஃது இருள்மலம் என்றும் சொல்லப்படும். இருள் தன்னைக் காட்டும், பிறபொருளைக் காட்டாது, ஆணவமலம் தன்னையும் காட்டாது பிற பொருளையுங் காட்டாது. "செம்பிற் களிம்பு போல ஆன்மாக்களின் அநாதியே உடன் கலந்து நிற்பதாய், ஒன்றேயாய், ஆன்மாக்கள் தோறும் வெவ்வேறாகி அவைகளுடைய அறிவையும் தொழிலையும் மறைத்து நின்று தத்தம் கால எல்லையிலே நீங்கும் அநேக சக்திகளையுடையதாய்ச் சடமாயிருப்பது" என்னும் சைவசித்தாந்தம்.

ஆணவம் அணுசம்பந்தமானது. அணு-ஆன்மா. ஆன்மாவை அணுத்தமைமப் படுத்தி நிற்றல் பற்றி அப்பெயர்த்தாயிற்று,

''பொங்கு செங்கதிர்ப் புறத்துநின் றிணைவழி புகுத்துங்
கங்குல் வல்லிருள் ஒன்றையே போக்குறும், கருதின்
இங்கு நல்லருள் ஞானதே சிகனெனும் இரவி
தங்கும் உள்ளொடு புறத்துறும் இருளெலாந் தள்ளும்.''
(சித்-சிகா, கிரியாலிங்கத்தவம் செய் 4)

(செங்கதிர்-சூரியன், உள்-அகம்)
என்பது ஈண்டொப்பிடத் தக்கது,

94. அற்பகலு மாறாது அரனடியார்க் கீதலுங்
கற்பகமாய் வந்துதிருக் காஞ்சிநக ருற்றானோ.

(பொருள்)

அல் பகலும்-இரவும் பகலும், அரன் அடியார்க்கு-சிவனடியார்களுக்கு, மாறாது ஈதலும்-கேட்டவற்றை இல்லையென்றுரையாது கொடுத்தலைச் செய்யும், கற்பகமாய் வந்து திருக்காஞ்சி நகர் உற்றானோ கற்பகத் தருவாய் வந்து காஞ்சிமா நகரில் எழுந்தருளியவனோ.

(விளக்கம்)

அற்பகலும் என்பது கால எல்லையின்றி எப்பொழுதும் என்னும் பொருள் குறித்தது, கற்பகம் விண்ணுலகத்துள்ள ஒரு தரு. கேட்டவற்றை அளிக்கவல்லது. சிவனடியார் விரும்பியவற்றைச் சிவஞானி கொடுத்து ஓம்பிய வள்ளற்றன்மையராய் விளங்கினாராதலின் ''அரனடியார்க்குக் கற்பகமாய் வந்து உற்றானோ'' என்றார் காஞ்சி மாநகரம் சிவஞானி திருமடங் கொண்ட தலங்களுள் ஒன்று. காஞ்சி உலகத்துள்ள மரங்களுள் ஒரு வகை. கற்பகம் காஞ்சி என்ற சொல்லாட்சியிலுள்ள நயங் காண்க.

அற்பகல்-உம்மைத்தொகை.

இதனால் சிவஞானிசிவனடியார்களைப் பேணிய திறங் கூறப்பட்டது.

95. பூணாம் அருள்வசவன் பூண்டசர பூசையன்று
காணா எமக்கின்று காட்டுசிவ ஞானியோ.

(பொருள்)

அருள் பூண் ஆம்-அருளை அலங்கரிக்கும் ஆபரணமாக விளங்கும் வசவண்ணர், அன்று பூண்ட சரபூசை-அந்நாளில் மேற்கொண்ட சங்கம வழிபாட்டினை, காணா எமக்கு — காணப் பெறாத எங்களுக்கு, இன்று காட்டு சிவஞானியோ — இந்நாளில் அறியுமாறு காட்டுகின்ற சிவஞானியோ.

(விளக்கம்)

வசவண்ணர் கருநாடகத்தை கி.பி பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த விச்சல மன்னனுக்கு அமைச்சராயிருந்தவர். அவர் கல்யாணபுரியில் திருமடம் அமைத்துக்கொண்டு வரும் சங்கமர்களுக்கு உணவு—உடை—பிறவும் அளித்து ஓம்பிவந்தார். சங்கம வழிபாட்டில் சிறந்து விளங்கினரார். அவ்வாறே தமிழகத்தில் சிவஞான பாலய சுவாமிகள் தம் திருமடத்திற்கு வரும் சங்கமர்களுக்கு உணவு—உடை—பிறவும் அளித்துப் பேணினார். இந்நூலாசிரியராகிய சிவப்பிரகாச சுவாமிகள் காலத்திற்கு முற்பட்டவர் வசவண்ணர் ஆதலின், வசவண்ணர் ஆற்றிய சங்கம வழிபாட்டினைக் காணப் பெற்றிலமே யென்று ஏக்கமுறும் எங்களுக்கு இந்நாளில் "காட்டு சிவ ஞானியோ" என்று புகழ்ந்துரைப்பாராயினர்.

சங்கமம்—சங்கமர், வீரசைவ அடியார்கள், சிவ சரணர்.

இதனால் சிவஞானி ஆற்றிய சிவரணர் வழிபாட்டின் சிறப்பு அறிவிக்கப்பட்டது.

96. விருப்பு வெறுப் பின்மை விளக்கஎன் புன்சொல்லைத்
திருப்பதங் கொள்கின்ற சிவஞான தேசிகனோ.

(பொருள்)

விருப்பு வெறுப்பின்மை விளக்க தமக்கு ஒரு பொருளின்கண் விருப்பும் ஒரு பொருளின்கண் வெறுப்பும் இல்லாமையை விளக்க, என் புன் சொல்லை — (சிறந்த புலவர்களுடைய துதிப்பாடல் -களுடன்) அடியேனது புல்லிய சொற்களாகிய பாடல்களையும், திருப்பதம் கொள்கின்ற சிவஞான தேசிகனோ — தம் திருவடியில் ஏற்றுக்கொள்கின்ற சிவஞான தேசிகனோ.

(விளக்கம்)

விரும்பு வெறுப்பின்மை நடுவுநிலையென்னும் சுவை. இது காம வெகுளி மயக்கம் நீங்கிய துறவினர்க்குரியது.

''கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்'',
(பெரிய – திருக்கூட்டச் சிறப்பு செய் 8)

'ஓடும் பொன்னும் உறவும் பகையு மோர்
கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
விடும் கானமும வேறற நோக்குதல்
கூடும் தன்மை கொளுமன நன்மனம்.''
பிரபு— சாதகாங்க - செய் 10

என்பன ஞானிகளுக்குரிய இயல்புகளை விளக்கும்.
ஞானாசிரியனுடைய பாதம் காண்பதற்கும் வணங்குதற்கும் பர-அபர ஞானங்களைத் தருதற்கும் உரியவராதலின் திருஎன்னும் அடை மொழி புணர்த்து ''திருப்பதம்'' எனச் சிறப்பித்தோதினார்

புன்சொல்—பொருளற்ற சொல்; கருவியாகுபெயராய்ப் பாடல் -களை உணர்த்திற்று. புன்சொல் (உம்) - இழிவு சிறப்பும்மை தொக்கது. விருப்பு (உம்) வெறுப்பு (உம்) உம்மைகள் தொக்கன.

இந்நூலாசிரியராகிய கவிஞர் பெருமான் புலவர்களால் கற்பனைக் களஞ்சியம் என்றும் கவிதாசார்வபௌமர் என்றும் போற்றியுரைக்ப்

பெறும் கல்விப் பெருமையுடையராயினும் தம் பாடல்களைப் புன் சொல் எனக்கூறுதல் அவர்தம் கல்விச் செருகின்மையைப் புலப்படுத்தும்.

97 பொறியூடு செல்லுமனப் போர்க்களிற்றைத் தன்தாள்
தறியூடு நிற்பத் தளைந்தசிவ ஞானியோ.

(பொருள்)

பொறியூடு செல்லு மனப்போர்க்களிற்றை - ஐம்பொறிகளின் வழியே செல்கின்ற மனமாகிய போர்க்களிற்றை, தன் தாள் தறியூடு —தனது திருவடியாகிய கட்டுத் தறியிடை, நிற்பத்தளைந்த சிவஞானியோ - நிற்குமாறு கட்டிய சிவஞானியோ.

(விளக்கம்)

போர்க்களிறு — போர்புரிவதில் வல்ல ஆண்யானை. மனம் ஐம்பொறிகளின் வழியே சென்று புற விடயங்களைப் பற்றுந் தன்மைத் தாதலின் அதனைப் போர்க்களத்தில் பல இடத்துஞ் சென்று தாக்கும் களிறாக உருவகப்படுத்தியோதினார். களிறு கட்டுத் தறியில் கட்டப்படுதல் போலத்தன் மனத்தைச் சிவஞானி தம் திரு வடியில் பதியுமாறு உபதேசத்தால் செய்தருளினார் என்பார், "தன் தாள் தறியூடு நிற்பத்தளைந்த சிவஞானியோ" என்றார்.

மனத்தைப் போர்க்களிறாகவும், தாளைக் கட்டுத்தறியாகவும் கூறியதால் இஃது உருவக அணி.

தளைதல்—கட்டுதல் தறி—கட்டுத்தறி, நடுதறி
இதனால் ஆசிரியர், தன் மனத்தைச் சிவத்தியானத்தில் நிற்குமாறு சிவஞானி செய்தருளினாரென்பதைப் புலப்படுத்துகின்றார். இது மனோலயம்.

98 பாடியுந்தன் சீர்த்தி பரவியுந்தன் பாதமலர்
சூடியுமிக் காலந் தொலைக்கஅருள் செய்தானோ.

(பொருள்)

தன் சீர்த்தி பாடியும்-தனது மிக்கப் புகழைப் பாக்களில் அமைத்துப்பாடியும், பரவியும்—துதித்தும், தன் பாதமலர் சூடியும்—தனது

திருவடியாகிய தாமரை மலரைத் தலைமேல் அணிந்தும், இக்காலம் தொலைக்க அருள் செய்தானோ—என் வாழ்நாளாகிய இக்காலத்தைக் கழிக்க அருள்புரிந்தனனோ.

(விளக்கம்)

பாடுதல், மனத்தில் எண்ணிப்பாடுதலால் அது மனத்தின் செயல். பரவுதல் வாக்கின் செயல். பாதமலர் சூடுதல் காயத்தின் செயல். ஆகவே மனம்-வாக்கு-கிரியைகளாகிய முக்கரணங்களின் செயல்களைச் சிவஞானியின் பணிக்கே உரியனவாக அடியேன் அர்ப்பித்தேன். அங்ஙனம் செய்யச் சிவஞானியே அருள்புரிந்தாரென்பதாம். இக்கண்ணியின் பொருள்,

"சிந்தனைநின் தனக்காக்கி நாயினேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்காகி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கி"

(திருவாசகம்—திருச்சதகம், செய் 25)

என்னும் மணிவாசகப் பெருமான் திருவாக்கினை நினைவுபடுத்துகிறது, "சீர்த்தி மிகுபுகழ்." (தொல்-உரி-சூ-15)

99 பொய்ம்மாயை யென்னும் புலியின்வாய்ப் பட்டேனைக்
கைம்மா றிலாமல் கருணைகொடு மீட்டானோ.

(பொருள்)

பொய்ம்மாயை என்னும் புலியின்வாய்ப் பட்டேனை-பொய்யாந்தன்மை வாய்ந்த மாயையென்னும் புலியினிடம் அகப்பட்ட என்னை கைம்மாறு இலாமல் கருணைகொடு மீட்டானோ என்பால் பிரதிப்பயனைக் கருதாமல் தன் அருளாகிய ஆயுதங்கொண்டு உய்வித்தவனோ.

(விளக்கம்)

தனக்கென ஓர் உருவமின்மை யானும் பொருளல்லதைப் பொருளாகக் கொள்ளும் மயக்கத்தை யுண்டாக்கலானும்

"பொய்ம்மாயை" எனப்பட்டது, மாயைக்குத் தமம்—மாயை -மோகம் - அவித்தை-பொய்-யுருவி என்னும் பெயர்களுண்டு இவற்றை மாயா பஞ்சகம் என்பர். இவற்றுள் **பொய்யுருவி** என்பதும் ஒரு பெயராக வுள்ளது.

பொய்யுருவி—மித்தியாரூபி.

"உள்ளது போல் தோன்றி விசாரணை முகத்தில் தனக்கெனவோர்
வடிவமின்றி யொழிவது மித்தை யெனப்படும்."

மித்தை — பொய். (வே. சூ. செய் 59 )

(திரு - வடிவேல் செட்டியார் குறிப்பு.

"மாயை மயக்கமுஞ் செய்யும் அன்றே" (சிவ-சித்-பிர-2-சூ-ம்-செய் 53)

"எண்ணருஞ் சத்தியால் உலகெலா மயக்கும் இம்மாயை
நண்ணு மெய்ச்சிவத் தயிக்கனை நண்ணுற வற்றோ."

(சித்-சிகா. சிட்டோதனத்தலம் செய். 3.)

என்பன காண்க.

மாயையின் கொடுமை தோன்றக் கொடிய விலங்காகிய "புலி" என அதனை உருவகப்படுத்தி யோதினார். புலியால் பற்றப்படு வார் அதனின்றும் மீளுதல் அரிதாதல் போல மாயை வயப்பட்ட ஆன்மாவும் உய்தல் அரிது மாயை வயப்படுதலாவது மாயை யாலமைந்த தனு-கரண-புவன-போகங்களால் பந்தப் படுதல.

"மாயை யென்னும் புலி" என்றது. ஏகதேசவுருவகம். கருணையை ஆயுதமாக உரையிற் கூறப்பட்டது.
புலியின் வாய்-வாய் ஏழனுருபு. கொடு-மூன்றன் சொல்லுருபு.

100 பத்தியுந்தன் பங்கயப்பொற் பாததமே பாடுகின்ற
சித்தியுந்தந் தாளும் சிவஞான தேசிகனோ.

(பொருள்)

பத்தியும்— தம்பால் செலுத்தும் அன்பினையும், தன் பங்கயப் பொற்பாதமே — தம்முடைய தாமரை மலர்போலும் அழகிய

திருவடியையே, பாடுகின்ற சித்தியும் — பாக்களில் அமைத்துப் பாடுதற்குரிய அறிவையும், தந்து ஆளும் சிவஞான தேசிகனோ என் உண்ணின்று தந்து ஆட்கொள்ளும் சிவஞான தேசிகனோ.

(விளக்கம்)

பாதமே— ஏகாரம் பிரிநிலை. எதுகை நோக்கிச் சித்து சித்தி எனப்பட்டது. சித்து —அறிவு. ஞானம்.

அன்பின் எழுச்சியால் தோன்றிய இப்பாடற்பணி சிவஞான தேசிகரின் அருளால் ஆனதேயன்றித் தம் செயலன்று எனக்கூறி ஆசிரியர் நூலை நிறைவேற்றும் அருமை போற்றற்குரியதாம்.

**ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க.**



## உரையில் எடுத்தாண்டுள்ள நூல்களின் குறுங்குறிப்பு

| | | |
|---|---|---|
| 1. | அக்-சி | அக்கமா தேவி சிருட்டி (கையெழுத்துப்பிரதி) |
| 2. | அ-ச. | அல்லமாப்பிரபு தேவர் சடுத்தலம் ,, |
| 3. | அ-வெ | அத்துவித வெண்பா. |
| 4. | | அருணாசலப் புராணம். |
| 5. | | அற்புதத் திருவந்தாதி. |
| 6. | | ஆத்திசூடி |
| 7. | இ-அபி | இஷ்டலிங்க அபிஷேக மாலை. |
| 8 | உ-வி | உண்மை விளக்கம் |
| 9. | ஒழிவி | ஒழிவிலொடுக்கம். |
| 10 | கு. நெடில் | குறுங்கழி நெடில் |
| 11 | சதா. | சதாசிவரூபம். |
| 12 | சிவ-சித் | சிவஞான சித்தியார் |
| 13 | சிவ-தீபம் | சிவஞான தீபம் |
| 14 | சித்-சிகா | சித்தாந்த சிகாமணி, |
| 15 | சிவ. பி. தமி | சிவஞான பாலைய தேசிகர் பிள்ளைத் தமிழ் |
| 16 | சிவ. நெ தூது | ,, நெஞ்சு விடு தூது |
| 17 | சிவ-கலம் | ,, கலம்பகம் |
| 18 | சீகா-பு. | சீகாளத்திப் புராணம் |
| 19 | சிவ. தரு | சிவ தருமோத்திரம் |
| 20 | தணிகை | தணிகைப் புராணம் |
| 21 | த-நி-சா. | தத்துவ நிஜாநு போக சாரம். |
| 22 | | தனிப்பாடல் |
| 23 | குறள் | திருக்குறள் |
| 24 | | திருவாசகம் |
| 25 | | திருமந்திரம் |
| 26 | திரு-வெங் | திரு வெங்கைக்கோவை |
| 27 | திருப். பி. த | திருப்போரூர் சந்நிதிமுறை பிள்ளைத்தமிழ். |
| 28 | | திருவருட்பயன் |
| 29 | | திருநாவுக்கரசர் தேவாரம் |
| 30 | | திருக்கோவையார் |

31 தொல்காப்பியம்.
32 நிர-மா நிரஞ்சன மாலை
33 நெங்-நெ நெடுங்கழி நெடில்
34 பரம-ச பரம ரகசிய சடுத்தலம் (கையெழுத்துப் பிரதி)
35 பிரபு பிரபு லிங்க லீலை
36 புறம்-வெ புறப்பொருள் வெண்பாமாலை
37 பெரிய பெரிய புராணம்
38 மணி மணிமேகலை
39 மிசிர-ச மிசிர சடுத்தலம் (கையெழுத்துப் பிரதி)
40 வீரசைவப் பிரமாணம்
41 வீ-த-பி வீரசைவ தத்துவப்பிரகாசம் (தட்டச்சு)
42 வீர-பு வீரசிங்காதன புராணம்.
43 வீ-க் வீராகாரக்கட்டளை
வேதாந்த சூளாமணி.

## உரை

1. பரிமேலழகர் உரை.
2. சிவஞான பாடியம்
3. வேதாந்த சூளாமணி. ஜோ. வடிவேலு செட்டியார் குறிப்பு.
4. பேராசிரியர் உரை
5. கா-சுப்ரமணிய பிள்ளை, திருவாசகவுரை.
6. செ-நாகி செட்டியார், சித்தாந்த சிகாமணி உரை.
7. அத்துவித வெண்பா—உரை.
8. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் உரை. சிவஞான சித்தியார்

ஓம்

ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலட்டு.

## 1—11. கண்ணிகளின் விளக்கம்

பரசிவம் (அ) பிர்மம் (அ) நிஷ்கள மகாலிங்கம் உலக வுற்பத்தி காரணமாகத் தன்னுள் அடங்கியுள்ள சிற்சத்தியால் இலிங்கஸ்தலம் என்றும் அங்கஸ்தலமென்றும் பிரிந்தது. இலிங்கம்—சிவம். அங்கம்-ஆன்மா. இலிங்கமும் அங்கமும் கூடுதல் தலமாம்.

### பரசிவத்தலம்.

31 "அங்கலிங்க சத்திபத்தி அத்தமுக அர்ப்பிதசே
டங்களிவை அட்ட சகிலமெனச் சொன்னானோ."

## ஆறு எட்டான சகிலம்

| | சத்து | | சித்து | | | ஆனந்தம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 அங்கம் | 2 இலிங்கம் | 3 சத்தி | 4 பத்தி | 5 அத்தம் | 6 முகம் | 7 அர்ப்பிதம் | 8 சேடம் |
| 1 | பத்தன் | ஆசார லிங்கம் | கிரியா சத்தி | சற்பத்தி | சுசித்தம் | சத்தியோ ஜாதம் | மணம் | மணப் பிரசாதம் |
| 2 | மகேசன் | குருலிங்கம் | ஞான சத்தி | நயிட்டா பத்தி | சுபுத்தி | வாம தேவம் | இரசம் | இரசப் பிரசாதம் |
| 3 | பிரசாதி | சிவலிங்கம் | இச்சா சத்தி | அவதான பத்தி | நிரகங் காரம் | அகோரம் | உருபம் | உருபப் பிரசாதம் |
| 4 | பிராண லிங்கி | சங்கம லிங்கம் | ஆதி சத்தி | அநுபவ பத்தி | சுமனம் | தற்புருடம் | பரிசம் | பரிசப் பிரசாதம் |
| 5 | சரணன் | பிரசாத லிங்கம் | பராசத்தி | ஆனந்த பத்தி | சுஞ்ஞானம் | ஈசானம் | சப்தம் | சப்தப் பிரசாதம் |
| 6 | ஐக்கியன் | மகா லிங்கம் | சிற்சத்தி | சமரச பத்தி | சற்பாவம் | அதோ முகம் | இதயம் திருப்தி | பரிணாமப் பிரசாதம் |

## 50—53 கண்ணிகளின் விளக்கம்

பரசிவம். (நிரவயவ லிங்கம்.)

நிரஞ்சன — சூனிய — நிட்கள லிங்கம்.

லிங்கம் லிங்கம்

மூலசித்து + சின்னாதம் — சித்பிந்து — சித்கலை.

மகாலிங்கம் (சோதிமயம்)

அ உ ம்

ஓம்

சதாசிவம்

சதாசிவப் பிரமத்தின் ஐந்து திருமுகங்களில் ஐம்பூதங்கள் தோற்றம்.

1. சத்தியோசாத முகத்தில் மண்
2. வாமதேவ ,, நீர்
3. அகோர ,, தீ
4. தற்புருட ,, காற்று
5. ஈசான ,, வெளி.

இதயத்தில் ஆன்மா தோற்றம்.

குறிப்பு : மூலசித்து, நிட்களசித்து, சிவசித்து, சித்பிரணவம் என்பன ஒரு பொருள். நிட்களலிங்கத்தின் சித்தே சித் பிரணவமாம். அதனால் சின்னாதம், சித்பிந்து, சித் கலைகள் பிறந்தன. அவைகள் முறையே அகார உகார மகாரங்களாயின. அம் மூன்றும் ஒன்று கூடி ஓம் என்னும் பிரணவமாயிற்று.

# சடுஸ்தல விளக்கம்.

ஈண்டு ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் பிள்ளைத்தமிழ் (செங்கீரைப்பருவம்)பாடல் 13ஒப்பு நோக்கத்தக்கது. இப்பாடலின் விரிவே ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் தாலாட்டில் வீரசைவ சத்தல சித்தாந்த நுண்பொருள் கண்ணி 2முதல் 28வரை காணப்படுகிறது.

ஒருவாறு மின்றியிது என்றுணர அரியபரம்
ஒன்றிரண் டாகியவைமூ
உருவாகி மூவிரண்டாறாறு வகையிரட்
டுற்ற நூற் றெட்டு விரிவாய்

இருவாறு நின்றலகி யிருநூறு தலையிட்டு
ஈரெட்டும் ஆறாறினவ்
வெண் பெற்ற ஆறினவ் வாறுமூன் றினிலவை
இரண்டினில் இரண்டு மொன்றின்

மருவா அடங்கிநீ நானென்று மயலின்றி
மனவா சகங் கடந்து
வந்துகூ டுதலகறல் இன்றிநின் றிடுநிலைமெய்
மலரடி முடிக்களித்துத்

திருவாய் மலர்ந்தெனக் கொரு மொழியில் அருள்பவா!
செங்கீரை யாடியருளே
திமிரமலம் அகலவரு சிவஞான மாமுனிவ!
செங்கீரை யாடியருளே.

(இ-ள்) ஒரு ஆறும் இன்றி-பெயர் வடிவம் செயல் ஆகிய தன்மைகளில் யாதுமில்லாமல், இது என்று உணரஅரியபரம் ஒன்று இத்தன்மைத்தென்று அறிதற்கரிதாயுள்ள பரசிவமாகிய ஒரு பொருள் (பரசிவத்தலம்) இரண்டாகி-தன்னுடன் கூடியுள்ள சத்தியினாலே உலகவுற்பத்தி காரணமாக இலிங்கம் (இறைவன்) அங்கம் (ஆன்மா) என இரண்டாகி, (இலிங்க மென்பது சிவத்தலம். அங்கமென்பது சீவத்தலம்) அவை மூவுருவாகி-அவை ஒவ்வொன்றும் இலிங்கம் ஷ்ட, பிராண, பாவலிங்களென்ற மூவுருவாகி, அங்கம் தியாகாங்கம், போகாங்கம், யோகாங்கமென மூவுருவங்களாகி (அவை) மூவிரண்டு (ஆகி)-அவை ஆசாரலிங்கம்-குருலிங்கம் - சிவலிங்கம் - சங்கமலிங்கம்-பிரசாதலிங்கம்-மகாலிங்கமென இலிங்கத்தலம் ஆறாகி, பக்தன்-மயேச்சுரன்-பிரசாதி-பிராண லிங்கி - சரணன்-ஐக்கியன் என அங்கத்தலம் ஆறாகி, (அவை) ஆறு ஆறு வகை(ஆகி) அங்ஙனமாகிய இலிங்கத் தலம் ஆறும் அங்கத்தலம் ஆறும் கலப்பால் (மிசிரம்) ஒவ்வொன்றும் முப்பத்தாறாகி, அவை இரட்டு நூற்றெட்டு விரிவாய்-அங்ஙனமாகிய முப்பத்தாலும் இரு நூற்றுப் பதினாறாக விரிந்து, இருவாறு நின்றிலாகி-இங்ஙனம் இருவகையாய் நின்று விளங்கி, இரு நூறு தலைமிட்ட ஈரெட்டும்-இரு நூற்றுப் பதினாறு தலங்களும், ஆறு ஆறின்-முப்பதாறு தலங்களுள்ளும், அவ்வெண்பெற்ற-முப்பத்தாறு என்ற எண் பெற்ற அவை, ஆறின்-மேற் கூறிய ஆறு தலங்களுள்ளும் அவ்வாறும் மூன்றினில்-அவ்வாறு தலங்களும் மேற்கூறிய மூன்று தலங்களுள்ளும், அவை ரண்டினில்-அம்மூன்றும் மேற்கூறிய இரண்டு தலங்களிலும். இரண்டும் ஒன்றின்-சிவம் ஆன்மா என்ற இரண்டும், பரசிவத்தலமாகிய ஒன்றிலும். மருவா அடங்கி-மருவி அடங்கி, நீ நான் என்னும் மயலின்றி-நீ நான் என்று சொல்லப்படும் மயக்கமில்லாமல், மனவாசகங்-கடந்து மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாததாகி, வந்து கூடுதல் அகறல் இன்றி-வந்து சேருதல் பின்னர் விட்டு நீங்குதலுமின்றி. நின்றிடு நிலையை - எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாய் நிற்கும் உயர்நிலையை, மலர்அடிமுடிக்கண் வைத்து-நின்மலர் போன்ற திருவடியை அடியேனது முடியின்கண் வைத்து, திருவாய் மலர்ந்து-மலர்போலும் அழகியவாயால் உரைத்து, எனக்கு ஒரு மொழியில் அருள்பவா-அடியேனுக்கு தத்துவமசிவாக்கியத்தால் அருள்பவனே!, செங்கீரை யாடியருள்-, திமிரமலம் அகல வரு சிவஞான மாமுனிவ செங்கீரையாடியருளே. (எ-று)

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| பதிப்புரை | 7 | முதியோர்க்கு | முதலியோர்க்கு |
| ,, பக்-2 | 17 | குருமாக | குருமகா |
| முன்னுரை பக். | 11 | தந்துவப் | தத்துவப் |
| பக்கம்-8 | 21 | மாதச் | மாதவச் |
| 22 | கண்ணி-12 | லிங்கமோடு | லிங்கமொடு |
| 30 | 23 | பிரசாத்துத் | பிரசாதத்துத் |
| 34 | 5 | மருவியிலை | மருவியிவை |
| 36 | 15 | அறித்திடு | அறிந்திடு |
| ,, | ,, | மிசிர. ச. செ. 12 | மிசிர. ச. செ. 11 |
| ,, | 16 | 5 ஒளி | 5 ஒலி |
| 38 | 15 | எனச் சொனானோ | எனச்சொன்னானோ |
| ,, | 20 | உணத்தியதாம் | உணர்த்தியதாம் |
| 39 | 9 | திருகெந்த | திடுங்கெந்த |
| ,, | 10 | இதர | இரத |
| ,, | கண்ணி-25 | இலமுறையானாளும் | இம்முறையாறாறாம் |
| 44 | 1 | தூலாப் பொருள் | தூலப் பொருள் |
| 45 | 13 | மூவருமொன | மூவருமொன் |
| 48 | கண்ணி-31 | அர்ப்பிததேச | அர்ப்பிதசே |
| 54 | 21 | எழுந்தருமென்று | எழுந்தருளுமென்று |
| 56 | 3 | றேற்றம் | றோற்றம் |
| 61 | 6 | விலிமையுடையது | வலிமையுடையது |
| 63 | 6 | அஹோரமுகம் | அகோரமுகம் |
| 64 | 4 | என்றுரைத்தவனே | என்றுரைத்தவனோ |
| ,, | 10 | கண்ணி 40 | கண்ணி 41 |
| 66 | 10 | (நீஷ்கலம்) | (நீஷ்களம்) |
| 67 | 5 | போகரங்க | போகாங்க |
| 68 | 4 | சென்நே | சென்றே |
| ,, | 9 | இரண்டாபிற்று | இரண்டாயிரற்று |
| ,, | 13 | ஆறாசுவும் | ஆறாகவும் |
| 71 | 7 | னாணடானோ | றாண்டானோ |
| 72 | 13 | இலிங்கஸ்ம் யேரகம் யோகம் | இலிங்காங்கஸம் யோகம் ஸம்யோகம் |
| ,, | கண்ணி-48 | பெருமானே | பெருமானோ |
| ,, | 18 | தணக்கிடமாகக் | தனக்கிடமாகக் |
| ,, | கண்ணி-50 | சின்னாதி | சின்னாதாதி |
| ,, | 24 | அக்கினி | ஆக்கினி |
| ,, | 14 | ஒன்றாயிருப்ப | ஒன்றாயிருப்ப |

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| பதிப்புரை | 7 | முதியோர்க்கு | முதலியோர்க்கு |
| ,, பக்-2 | 17 | குருமாக | குருமகா |
| முன்னுரை பக் | 11 | தந்துவப் | தத்துவப் |
| பக்கம்-8 | 21 | மாதச் | மாதவச் |
| 22 | கண்ணி-12 | லிங்கமோடு | லிங்கமொடு |
| 30 | 23 | பிரசாத்துத் | பிரசாதத்துத் |
| 34 | 5 | மருவியிலை | மருவியிவை |
| 36 | 15 | அறித்திடு | அறிந்திடு |
| ,, | ,, | மிசிர. ச. செ. 12 | மிசிர. ச. செ. 11 |
| ,, | 16 | 5 ஒளி | 5 ஒலி |
| 38 | 15 | எனச் சொனாணோ | எனச்சொன்னானே |
| ,, | 20 | உணத்தியதாம் | உணர்த்தியதாம் |
| 39 | 9 | திருகெந்த | திடுங்கெந்த |
| ,, | 10 | இகர | இரத |
| ,, | கண்ணி-25 | இலமுறையானாளுஞ் | இம்முறையாறாறாம் |
| 44 | 1 | தூலாப் பொருள் | தூலப் பொருள் |
| 45 | 13 | மூவருமொன | மூவருமொன் |
| 48 | கண்ணி-31 | அர்ப்பிததேச | அர்ப்பிதசே |
| 54 | 21 | எழுந்தருமென்று | எழுந்தருளுமென்று |
| 56 | 3 | றேற்றம் | றோற்றம் |
| 61 | 6 | விலிமையுடையது | வலிமையுடையது |
| 63 | 6 | அதோமுகம் | அகோரமுகம் |
| 64 | 4 | என்றுரைத்தவனே | என்றுரைத்தவனோ |
| ,, | 10 | கண்ணி 40 | கண்ணி 41 |
| 66 | 10 | (நீஷ்கலம்) | (நிஷ்களம்) |
| 67 | 5 | போகரங்க | போகாங்க |
| 68 | 4 | சென்நே | சென்றே |
| ,, | 9 | இரண்டாபிற்று | இரண்டாமிரற்று |
| ,, | 13 | ஆறாசுவும் | ஆறாகவும் |
| 71 | 7 | னாணடானோ | றாண்டானோ |
| 72 | 13 | இலிங்கஸ்ம் யோகம் யோகம் | இலிங்காங்கஸம் யோகம் ஸம்யோகம் |
| ,, | கண்ணி-48 | பெருமானே | பெருமானோ |
| 75 | 18 | தணைக்கிடமாகக் | தனக்கிடமாகக் |
| ,, | கண்ணி-50 | சின்னாதி | சின்னாதாதி |
| 8 | 24 | அக்கினி | அக்கினி |
| 8 | 14 | ஒன்றாயிருப்பு | ஒன்றாயிருப்ப |